உ

சிவமயம்.

## பல வித்துவான்கள் பாடிய

# விவேக சிந்தாமணி.

### மூலமும் உரையும்.



**சரஸ்வதி புத்தகசாலை,**

63, ஜிந்தும்பிட்டித் தெரு,

கொழும்பு.

இதன் விலை] [அணா 4.

ஸ்ரீமத்

# கம்பராமாயண வசனம்

(சப்தகாண்டங்கள் அடங்கியது.)

[☞ இதேமாதிரி பெரிய எழுத்தில் படங்களுடன் அச்சிட்டுள்ளது.]

1064 பக்கங்கள்: உயர்ந்த காலிகோ பைண்டு செய்தவை விலை ரூ 5.
ஷை திக்கு கடிதம் 2-வால்யம் ரூபா 8.
ஷை உயர்ந்த கிளேஸ் கடிதம் ரூபா 12

ஸ்ரீராமபிரான் சரிதையை விரித்துக்கூறும் இந்த இராமாயண மானது மிக்க புண்ணிய கதை யென்பது உலகறிந்த விஷயம். இதனைப் பாராயணஞ்செய்வதாலுண்டாகும் பயன்கள் அளவிடற் கரியனவாம். இதனைப் பக்தி சிரத்தையுடன் படிப்பவர்க்கு உலகத்தில் விரும்பக்கூடிய பொருள்களெல்லாம் கைகூடும்; உயர்ந்த அறிவுண்டாகும்; கீர்த்தி அதிகரிக்கும்; மோக்ஷத்தை அடையும் மார்க்கம் ஏற்படும்; இலக்குமி கடாக்ஷமுண்டாகும்.

இன்னும் இந்த இராமாயணத்தைப் பக்தியுடன் படித்துமுழக்குமிடங்களில் கலியாணம் முதலிய மங்கள காரியங்கள் நிறைவேறும்; புத்திரபாக்கியமுண்டாகும்; பசு, பால், தானியம் முதலியன விருத்தியாகும்; பில்லி, சூனியம், தீராத நோய், பூதபைசாச உபத்திரவங்கள் முதலியன்வ நீங்கும்; பகை நீங்கும்; விஷ ஜெந்துக்கள் அணுகமாட்டா; பஞ்சம் நீங்கும்; நல்லமழை பெய்யும்; துக்கமான சம்பவங்கள் நீங்கி மிக்க ஆனந்தமுண்டாகும். இவையெல்லாம் உண்டாவது நிச்சயம். இராமாயணம் படித்த பற்பல இடங்களில் இப்பயன்கள் உண்டாகி யிருக்கின்றன. இவற்றை ஒவ்வொருவரும் அனுபவத்திலும் உணர்ந்து கொள்ளலாம்.

☞ சொற்பக் காப்பிகளே அச்சிடப்பட்டிருக்கின்றன. ஆதலின் புஸ்தகம் வேண்டியவர்கள் முன்னரே எழுதிப் பெற்றுக் கொள்க.

**சரஸ்வதி புத்தகசாலை,**
63, ஜிந்தும்பிட்டித்தெரு,
கொழும்பு

அ.

வள்ளியம்மை

உ

கடவுள் துணை.

பல வித்வான்கள் பாடிய

# விவேக சிந்தாமணி.

## மூலமும்–உரையும்.



சரஸ்வதி புத்தகசாலை,

70, செட்டித்தெரு,

கொழும்பு.

இதன் விலை] 1930. [அணா 4.

உ

கடவுள் துணை.

# விவேக சிந்தாமணி,

## மூலமும்—உரையும்.

### கடவுள் வணக்கம்.

நேரிசை வெண்பா.

அல்லல்போம் வல்வினைபோ மன்னைவயிற்றிற்பி றந்த, தொல்லைபோம் போகத் துயரம்போம்—நல்ல, குணமதிக மாமருணைக்கோபுரத்துள் வீற்றிருக்குங், கணபதியைக் கைதொழுதக் கால்.

(இதன் பொருள்.) திருவருணைக் கோபுரத்துள் எழுந்தருளப்பெற்ற விநாயகக்கடவுளை (பக்தியோடு வணங்கிக் கரங்களால் அஞ்சலி செய்யின் சகல துன்பங்களும் நீங்கும், வலிய ஆணவமலச் சேஷ்டையுமழியும், இம்மையிற் றாய்வயிற்றிற் கருத்தரித்துப் பிறந்ததற்குக் காரணமாய் நின்றபிராரத்த வினையுமகலும் இப்பிறப்பில் தேடப்பட்ட ஆகாமியவினைகளும் போகும் (என்றவாறு.)

அறுசீரடியாசிரிய விருத்தம்

ஆபத்துக் குதவாப்பிள்ளை யரும்பசிக் குதவா வன்னந், தாபத்தைத் தீராத்தண்ணீர் தரித்திரமறியாப் பெண்டீர், கோபத்தை யடக்காவேந்தன் குருமொழி கொள்ளாச்சீடன், பாபத்தைத்தீரா தீர்த்தம் பயனில்லை யேழுந்தானே.

(இ-ள்.) ஆபத்துக்கு உதவாப்பிள்ளையும், அரிய பசிக்கு உதவாத அன்னமும் தாகவெப்பத்தைத் தீர்க்காததண்ணீரும், வறுமையறியாமல் (அதிக செலவு செய்யும்) மனைவியும், கோபத்தைத் தணிக்காத அரசனும், ஆசிரியன் உபதேசித்த மொழிகளைக் கொள்ளாத மாணாக்கனும், பாவங்களைத் தீர்க்காத தீர்த்தங்களும் ஆகிய இவ்வேழினாலும் பயனில்லை.

பிள்ளைதான் வயதின்மூத்தாற் பிதாவின் சொற்புத்திகேளான், கள்ளிவிழற்குழலாள் மூத்தாற் கணவனைக் கருதிப்பாராள், தெள்ளற வித்தைற் கற்றுற் சீடனுங் குருவைத்தேடான், உள்ளநோய் பிணிகடீர்ந்தாலுலகர்பண் டிதரைத் தேடார்.

(இ-ள்.) மைந்தரும் வயது முதிர்ந்த பின்தந்தை சொற்புத்தி கேளார்கள், மதுமலர்க் கூந்தலையுடைய மனைவியரும் முதிர்ந்தபின் தம் கணவர்களை மதிக்கமாட்டார்கள், மாணுக்கர்களும் தெளிந்து குற்றமறக் கல்வியைக் கற்றுக்கொண்டபின் ஆசிரியரைத் தேடார்கள், நோய்தீர்ந்தபின் உலகத்தினரும் வைத்தியரைத் தேடார்கள் எ-று. 2

குக்கலைப் பிடித்துநாவிக் கூண்டினி லடைத்து வைத்து, மிக்கதோர் மஞ்சல்பூசிமிகுமணஞ் செய்தாலுந்தான், அக்குலம் வேறதாமோ வதினிடம் புனுகுண்டாமோ, குக்கலே குக்கலல்லாற் குலந்தனிற் பெரியதாமோ.

(இ-ள்.) புனுகுபூனை வசிக்கத்தக்க கூட்டினில் நாயைப்பிடித்து அடைத்துவைத்து மேன்மையான

மஞ்சள் முதலியவைகள் பூசி அதிகவாசனை யூட்டினு லும் அது ஜாதியில் வேருகுமோ. அதனிடம் புனு குண்டாமோ, நாய் நாயாகுமேயல்லாமல் வேறுபெரிய (ஜாதியாமோ) ஆகாது எ-று. 3

ஒப்புடன் முகமலர்ந்தே யுபசரித் துண்மைபேசி, உப்பிலாக்கூழிட்டாலு முண்பதே யமிர்தமாகும், முப் பழமொடு பாலன்னம் முகங்கடுத்திடுவாராயின், கப்பிய பசியிஞேடு கடும்பசி யாகுந்தானே.

(இ-ள்.) யாவரும் ஒப்பத்தக்க முகமலர்ச்சியோடு உபசாரஞ்செய்து உண்மையான மொழிகளைப்பேசி உப்பிலாக் கூழைவார்த்தாலும் (அது) உண்பவர்க்கு அமிர்தமேயாம். மா, பலா, வாழை முதலிய முப்பழ வர்க்கங்களோடு உயர்ந்த அன்னத்தை அன்பிலாது முகங்கடுத்து ஒருவர்க்கிடுவாராகில் அவையுண்பவர்க் கு உள்ளபசியினும் மிகுபசியை யுண்டாக்குமல்லாமல் தணிக்காது. எ-று. 4

கதிர்பெறு செந்நெல்வாடக் கார்குலங் கண்டுசெ ன்று, கொதிதிரைக் கடலிற் பெய்யுங் கொள்கைபோற் குவலயத்தே, மதிதனம்படைத்த பேர்கள் வாடிஞேர் முகத்தைப் பாரார், நிதிமிகப் படைத்தோர்க்கீவார் நி லையிலார்க் கீயமாட்டார்.

(இ-ள்) மேகக்கூட்டங்கள் சிவந்த நெற்பயிர்கள் நீரின்றி வாடக்கண்டும் அங்கு நீர் பொழியாது அலை கள் வீசானின்ற சமுத்திரத்தினிடத்து பெய்யுந் தன் மைபோல் உலகத்தில் மதிக்கத்தக்க தனம் படைத்த

வர்கள் அதிக நிதியுடையவர்க் கீவரல்லாமல் நிலையி
லாது வாடினோர் முகங்கண்டு கொடுக்கார்கள். 5

ஆலிலை பூவுங்காயு மளிதரு பழமுமுண்டேல், சாலவே பக்ஷியெல்லாம் தன்குடியென்றேவாழும், வாவிபர் வந்துதேடி வந்திருப்பார் கோடாகோடி. ஆலிலை யாதி போனா லங்குவந் திருப்பாருண்டோ.

(இ-ள்.) ஆலவிருக்ஷத்தினிடத்து இலை, பூ, காய், இனிமைதரும் பழம் முதலியவைகளிருந்தால் மிகுதியாக பலபக்ஷிகளும் தமது இருப்பிடம்போலக் கூடி வாழும். இலை முதலியவை நீங்கி மரம் பட்டு நிற்கில் ஒருபக்ஷியும் சேரா. அதுபோல மிகுந்த செல்வமிருக்கில் அளவிறந்தவர்கள் வந்துகூடி வந்தனம்செய்வார்கள், செல்வமில்லையேல் ஒருவருங் கூடார்கள் எ-று 6

அறுசீரடியாசிரிய விருத்தம்.

பொருட்பாலை விரும்புவார்கள் காமப்பாலிடை மூழ்கிப் புரள்வர்கீர்த்தி, யருட்பாலா மறப்பாலைக் கனவிலும் விரும்பார்க ளறிவொன்றில்லார், குருப்பாலக் கடவுளர்பால் வேதியர்பாற் புரவலர்பாற் கொடுக்கக் கோரார், செருப்பாலே யடிப்பவர்க்கு விருப்பாலே கோடிசெம்பொன் சேவித்தீவார்.

(இ-ள்.) செல்வத்தினிடத்தே அதிகவிருப்பங் கொள்பவர்கள், காமத்தினிடத்தே மூழ்கிப்புரள்வார்கள். அருளாகியசெல்வத்தைத்தரும் தருமத்தைக் கனவிலும் விரும்பார்கள், கொஞ்சமு மறிவில்லாதவராய் ஆசாரியரிடத்தும் கடவுளிடத்தும் அந்தணர்களிடத்

தும், அரசர்களிடத்தும் ஒருபொருளும் கொடுக்கக் கோரார்கள், கோடிசெம்பொன்னுயினுந் தன்னைப்பாத ரக்ஷையால் சிக்ஷிப்பவர்க்கே ஆசையோடு வந்தனஞ் செய்து கொடுப்பார்கள் எ-று. 7

வேறு.

தண்டாமரையி னுடன்பிறந்துந் தண்டே னுகரா மண்டூகம், வண்டோகானத்திடையிருந்து வந்தேகம லமதுவுண்ணும், பண்டே பழகியிருந்தாலு மறியார் புல்லோர் நல்லோரைக், கண்டேகளித்தங் குறவாடித் தம்மிற் கலப்பர் கற்றோரே.

(இ-ள்.) தவளையானது தன்னுடன் பிறந்துவள ர்ந்திருக்கும் குளிர்ந்ததாமரையிலுள்ள தேனை உண்ண வறியாது காட்டிலிருந்த வண்டுகளேவந்து அந்தமது வையுண்டு களிக்கும் (அதுபோலவே) நெடுநாள் பழ கியிருக்கினுங் கற்றோர் அருமையை அறிவிலார் அறியார், கற்றவரே அறிவார் எ-று. 8

கலி விருத்தம்.

வானரமழைதனி னனையத்தூக்கணந்
தானொருநெறிசொலத் தாண்டிப்பிய்த்திடு
ஞானமுங்கல்வியு நவின்றநூல்களும்
ஈனருக்குரைத்திடி லிடராதாகுமே

(இ-ள்) முன்னமே பிரயாசையாற் கூடுகட்டி வ சித்திருந்த ஓர் தூக்கணம் பக்ஷி, வீண் காலங்க ழித்துத் திரிந்து வசிக்க இடமின்றி மழையில் நனைந் து வருந்திய ஒரு வானரத்தைக்கண்டு என்னைப்போல

ஓர் இருப்பிடம் செய்துகொள்ளலாகாதா என்றவுடன் குரங்கு சினந்து அதன் கூண்டைப் பறித்தெறிந்தது போல, கல்வியானிறைந்த ஞான நூல்களை அறிவில்லார்க் குரைத்திடில் துன்பமே உண்டாகும் எ-று 9

தலைவன் தலைவியைப் புகழ்தல்.

வண்டுமொய்த் தனையகூந்தல் மதனபண்டார வல்லி கெண்டையோ டொத்தகண்ணாள் கிளிமொழி வாயினாரல், கண்டுசர்க்கரையோ தேனோ கனியொடு கலந்தபாகோ, அண்டர்மா முனிவர்க்கெல்லா மமுத மென் றளிக்கலாமே.

(இ-ள்.)வண்டுகள் மொய்த்திருந்தது போன்றகூந்தலையும் கயலொத்த கண்களையும் கிளிமொழியொத்த சொல்லையும் உடையமன்மத பொக்கிஷமென்னும்பெயரையுடைய கொடி போன்றவளின் வாயினாரல் கற்கண்டோசர்க்கரையோ தேனோ பழத்தொடு கலந்தபாகோ (அறியோம் ஆயினும்) தேவர் முனிவர்களுக்கெல்லாம் அமிர்தமென்று கொடுக்கலாம்.

கற்பத்தருவைச் சார்ந்த காகமுமமுதமுண்ணும் விற்பனவிகேமுள்ள வேந்தரை சேர்ந்தோர் வாழ்வார் இப்புவி தன்னிலென்று மிலவு காத்திடுங் கிளிபோல் அற்பரைச்சேர்ந்தோர் வாழ்வ தரிதரிதாகுமம்மா!

(இ-ள்) கற்பகவிருக்ஷத்தை அடுத்த காகமும் அமிர்தமுண்ணும், மிகுதியான அறிவுள்ள வேந்தரைச் சேர்ந்த எளியவரும் வாழ்வடைவார்கள் இலவு விருக்ஷத்தின் காயைப்பார்த்து பழுக்கும் பழுக்குமென்று

காத்திருந்துபார்த்து அபலமடையுங் கிளியைப்போல், அற்பரைச் சேர்ந்தோருலகில் வாழ்வது அரிதிலும் அரிதாகும் எ-று. 11

எண்சீரடியாசிரிய விருத்தம்.

ஆலகால விடத்தையுநம்பலா மாற்றையும்பெருங் காற்றையு நம்பலாங், கோலமாமத யானையை நம்பலா ங் கொல்லும் வேங்கைப்புலியை நம்பலாங், காலனூர் விடு தூதரை நம்பலாங் கள்ளர்வேடர் மறவரை நம்ப லாஞ், சேலைகட்டிய மாதரை நம்பினூற்றெருவினின்று தியங்கித் தவிப்பரே.

(இ-ள்) ஆலகாலவிஷம் நதி பிரசண்டக்காற்று அழகிய பெரியமதயானை கொல்லத்தக்க வேங்கைப் புலி எமனுலேவிடுந் தூதர்கள் வேடர் மறவர் இத்தி யாதி பேர்களையும் நம்பினாலும் சேலைகட்டியமங்கை யரை [நம்பொணுது] நம்புவரேல் தெருவில் நின்று மயங்கித்தவிப்பார்கள் எ-று. 12

அறுசீர் விருத்தம்.

சங்கு வெண்டாமரைக்குத் தந்தைதா யிரவிதண் ணீர், அங்கதைக்கொய்துவிட்டா லழுகச்செய்தந்நீர் கொல்லுந் துங்கவண் கரையிற் போட்டாற் சூரியன் காய்ந்துகொல்வான், தங்களி னிலைமைகெட்டா லிப் படித் தயங்குவாரே.

(இ-ள்) சங்குபோலும் வெள்ளைத்தாமரைக்குச் சூரியனும் தண்ணீரும் பிதாமாதாக்களாக விருக்கினு ம் அத்தாமரையைக் கொய்துவிடில் அந்நீரேயதனை அழுகச்செய்து கொல்லும், கரையில்விடில் சூரியன் காய்ந்துகொல்வான் அதுபோலத் தங்கள் நிலையைவி ட்டுபெயர்ந்தவர்கள் இவ்விதம் வருந்துவார்கள் எ-று. 13

எண்சீரடியாசிரிய விருத்தம்.

நாய்வாலை யளவெடுத்துப் பெருக்கித்தீட்டினற்ற மிழை யெழுதவெழுத் தாணியாமோ,பேய்வாழும் சுடு காட்டைப் பெருக்கித்தள்ளிப் பெரியவிளக் கேற்றி வைத்தால் வீடதாமோ, தாய்வார்த்தைகேளாத சகச ண்டிக்கென்சாற்றிடினு முலுத்தகுணந் தவிரமாட்டா ன், ஈவாரையீயவொட்டா னிவனுமீயா னெழுபிறப்பி னுங் கடையா மிவன் பிறப்பே.

(இ-ள்) நாயினது வாலை (எழுத்தாணி) இலக்க ணப்படி நீட்டித் தீட்டினாலும் நல்ல தமிழ் எழுத்துக் களை எழுதும் கருவியாமா, பேய்கள் வாழுஞ் சுடுகா ட்டை கூட்டித்தள்ளிப் பெரியதாகிய விளக்கேற்றி வைத்தாலும் வாசஞ் செய்ததற்குரிய வீடாகுமா, தாய் மொழிகேளாத சகசண்டிக்கு எவ்விதம் உரைக்கினும் உலோபகுணத்தை விடமாட்டான் கொடுப்பவரையுங் கொடுக்கவொட்டான் தானுங்கொடான், இவன் ஜன் மம் எழுவகைப்பிறப்பினும் ஈனத்வமடைந்த கடை ஜன்மமேயாகும் 14

அறுசீரடியாசிரிய விருத்தம்.

வெம்புவாள் விழுவாள் பொய்யே மேல்விழுந் தழுவாள் பொய்யே, தம்பலந் தின்பாள் பொய்யே சா வின்றே னென்பாள் பொய்யே, அம்பினுங் கொடிய கண்ணா ளாயிரஞ் சிந்தையாளை, நம்பினபேர்களெல் லா நாயினும் கடையாவாரே,

[இ-ள்] தியங்குவாள் விழுவாள் மேல்விழுந்த ழுவாள் [உரித்தானவள்போல்] எச்சிற்றம்பலத்தையு முண்பாள் [உன்னுடனே கூட] இறப்பேனென்பாள் இவையாவும் பொய்யே, இவ்வித சாலங்களமைந்த பலவளங்களையுடைய அம்பினுங் கொடுஞ்செய்கை களைக் காட்டுங்கண்களையுடைய மங்கையரை நம்பின பேர்களெல்லாம் மலமுண்ணும் நாயினுங் கீழ்ப்பட் டவரே யாவர் எ-று. 15

எண்சீரடியாசிரிய விருத்தம்.

கெற்பந்தான் மங்கையருக் கழகுகுன்றுங்கேள்வி யில்லாவரசனலுலகம்பாழாந், துற்புத்திமந்திரியாலரசு, க்கீனஞ் சொற்கேளாப் பிள்ளைகளாற் குலத்துக்கீனம் நற்புத்தி கற்பித்தாலற்பர்கேளார், நன்மைசெய்யத் தீமையுடனயந்துசெய்வார், அற்பரோ டிணங்கிவிடிற் பெருமைதாழு மரியதவங்கோபத்தா லழிந்துபோமே

(இ-ள்] மங்கையருக்கு கர்ப்பத்தால் அழகு குறையும், [நியாய நிறை] வினவாத அரசனல் உலகு பாழாகும், இராஜாங்கத்துக்கு துற்புத்தியுள்ள மந்திரிகளால் கெடுதியுண்டாகும், அறிவில்லார்க்கு நல்லபுத்திகளைச் சொன்னலுங் கேளார், நன்மைசெய்பவர்க்கு உடனே தீமையையே பாராட்டிச்செய்வார், இவ்விதமான சிறியவர்களோடு கூடினவர் மகிமை குறையும் கோபத்தினல் அருமையாகிய தவங்களும் சிதைந்து போம் ஈ-று 16

அறுசீரடியாசிரிய விருத்தம்

தன்னுடன் பிறவாத்தம்பி தனைப்பெருத்தாயார் தந்தை, அன்னியரிடத்துச் செல்வமரும்பொருள் வேசியாசை, மன்னியவேட்டின்கல்வி மறுமனையாட்டிவாழ்க்கை, இன்னவாறுங் கருமமாறு மிடுக்கத்துக்குதவாதன்றே

இ-ள் உடன்பிறவாத சகோதரர் தன்னைப்பெருத தாய்தந்தையர் மற்ருரிடத்திலுள்ள செல்வம் பொருளிச்சைகொண்ட வேசியராசை ஏட்டிலெழுதியிருக்குங் கல்வி அயலான் மனைவியோடு கூடியவாழ்க்கை இந்த ஆறுவகைகளுந் தக்க சமயத்துக்கு உதவமாட்டா. 17

ஓர் விரகமுற்ருேன் கூறியது.

எண்சீர் விருத்தம்.

ஒருநான்குமீரரையுமொன்றேகேளா யுண்மையாயையரையுமரையுங் கேட்டேன், இருநான்கு மூன்று

டனே யொன்றுஞ்சொல்லாயிம்மொழியைக் கேட்டப டி யீந்தாயாயின், பெருநான்கு மறுநான்கும் பெறுவா ய்பெண்ணே பின்னையோர் மொழிபுகலவேண்டாமின் றே, சரிநான்கும் பத்துமொரு பதினைந்தாலே சகிக்க முடியாதினியென் சகியேமானே.

[இ-ள்] ஆறுவது ராசி கன்னி, மூன்றுவதுநாள் செவ்வாய், பனிரெண்டாவது நக்ஷத்திரம் உத்திரம், இருபத்தெட்டாவது வருடம் ஜெய, இருபத்தொ ன்பதாவது ஆண்டு மன்மத [கருத்து] கன்னியே! உன் செவ்வாயைக்கேட்டேன் ஒருத்திரம் சொல்வாய் கேட்டபடி கொடுப்பாயாகில் ஜெயம் பெறுவாய் வே று புன்மொழி சொல்லக்கூடாது மன்மத வேதனை இனி என்னுல் சகிக்கமுடியாது மானே எ-று. 18

ஒரு ஸ்திரீயின் முகத்தையுங் கரத்தையும் வியந்து கூறியது.

ஏழுசீரடியாசிரிய விருத்தம்

தேனுகர்வண்டுமதுதனையுண்டு தியங்கியே கிட ந்ததைக்கண்டு, தானதைச் சம்புவின்கனியென்றுதட ங்கையாலெடுத்துமுன் பார்த்தாள், வானுறுமதியம் வந்ததென்றெண்ணிமலர்க்கரங் குவியுமென் றஞ்சிப், போனது வண்டோ பறந்ததோ பழந்தான் புதுமை யோ விதுவெனப் புகன்றுள்

[இ-ள்] தேனையுண்ணத்தக்க வண்டுகள் மதுக் களையுண்டு மயங்கிக்கிடந்ததைக்கண்ட ஒரு பெண் அ தை நாவற்பழமென்று விசாரித்து தனது கையாலெ டுத்துப் பார்த்தாள் அவ்வண்டு [அவள் முகத்தினழ கால்] ஆகாயத்தின் கண்ணுள்ள சந்திரன் வந்ததெ ன்று நினைத்து அதனுல் அவள் கரமாகிய தாமரை ம லர் மூடிக்கொள்ளுமென்று பயந்து பறந்தது பின்பு அம்மங்கை பறந்துபோனது வண்டோ பழமோ அல் லது யாது புதுமையோ வென்று ஐயமுற்றுச் சொ 19 ன்னுள் எ-று

எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

கருதிய நூல்கல்லாதான் மூடனாகுங் கணக்கறிந்து பேசாதான் கசடனாகும்; ஒரு தொழிலுமில்லாதான் முகடியாகு மொன்றுக்கு முதவாதான் சோம்பனாகும். பெரியோர்கள் முன்னின்று மரத்தைப்போலும் பேசாமலிருப்பவனே பேயனாகும்,பரிவுசொலித் தழுவினவன்பசப்பனாகும் பசிப்பவர்க்கிட்டுண்ணான் பாவியாமே,

(இ-ள்) வாசிக்கத்தக்க நல்ல சாஸ்திரங்களைக் கல்லாதவன் மூடன், அளவறிந்து பேசாதவன் கசடன் ஒரு தொழிலு மில்லாதவன் மூதேவி, ஒன்றுக்கு முதவாதான் சோம்பன், மரம்போலவணங்கர்து அறிவுடையோர் முன்பாக நின்று துதியாதிருப்பவனே பேயன் (அன்பின்றி) அன்புபோற் காட்டித் தழுவுகின்றவன் பசப்புகின்றவன், பசியாளர்களுக்குக் கொடுத்துண்ணாதவன் பாவி எ-று. 20

ஆறுசீரடியாசிரிய விருத்தம்.

தாங்கொணா வறுமைவந்தாற் சபைதனிற் செல்ல நாணும் வேங்கைபோல் வீரங்குன்றும் விருந்தினர்க் காண நாணும் பூங்கொடி மனையாட்கஞ்சும் புல்லருக் கிணக்கஞ்செய்யும் ஓங்கியவறிவு குன்று முலகெலாம் பழிக்குந்தானே.

(இ-ள்) பொறுப்பதற்கரிய தரித்திரம் (ஒருவனுக்கு) வந்தால் சபையிற்செல்ல வெட்கமாம், வேங்கைப் புலிபோலுள்ள வீரங் குறையும், விருந்தினரைப்பார்க்க வெட்கமுண்டாம், புட்பக்கொடிபோன்ற (இடையை யுடைய) தன் மனைவிக்கும் பயப்படவேண்டிவரும், அற்பர்களோடும் கூட்டுறவுண்டாம் மேன்மேலும் வளரத்தக்க அறிவும் குறையும், உலகமெல்லாம் பழித்தற்கிடமுண்டாம் எ-று. 21

## கலி விருத்தம்.

அரும்புகோணிடி லதுமணங்குன்றுமோ
கரும்புகோணிடில் கட்டியும்பாகுமாம்,
இரும்புகோணிடில் யானையைவெல்லலாம்
நரம்புகோணிடில் நாமதற்கென்செய்வோம். 22

வேசி தன் தோழியை வினவுதல்

அறுசீரடியாசிரிய விருத்தம்.

† அன்னையே யனையதோழியறந்தனை வளர்குமா தே, உன்னையோருண்மை கேட்பே னுரைதெரிந் துரைத்தல் வேண்டும், என்னையே புணருவோர்களெனக்குமோ ரின்பநல்கிப், பொன்னையுங் கொடுத்துப்பாதப் போதினில் வீழ்வதேனோ,

(இ-ள்) தாய்போலுங் கருணையுள்ள பாங்கியாகிய தரும்குணமுள்ள பெண்ணே! உன்னிடத்தில் ஒருண்மை கேட்கிறேன், அதைத்தெளிந்து சொல்ல வேண்டும். அதாவது என்னிடத்து கலவியை விரும்பினவர்கள் எனக்கு இன்பத்தைக்கொடுத்தும் பொருளைக் கொடுத்தும் எனது மலர்போன்ற காலில்வீழ்கிறார்கள் யாதுகாரணம் எ-று. 23

† பொம்மெனப்பணைத்துவிம்மிப் போர்மதன்மயங்கிவீழுங், கொம்மைசேர் முலையினாளே கூறுவேனொன்றுகேண்மோ, செம்மையினறஞ்செய்யாதார் திரவியஞ் சிதரவேண்டி, நம்மையுங் கள்ளருஞ்சூது நான்முகன் படைத்தவாறே.

(இ-ள்) பொலிவாகிப் பருத்து விம்முதலுற்று வலிமையுள்ள மன்மதனையும் மயங்கச் செய்கின்ற வட்டவடிவான ஸ்தனத்தையுடையவளே!ஒன்றுசொல்லுகிறேன் கேட்பாயாக,செவ்வையாக தருமஞ்செய்யாதவர்கள் பொருள்களெல்லாஞ் சிதறுத லடையும் பொருட்டேநம்போன்றவேசியரையும்கள்ளரையும்சூதாடுதலையும்பிரமதேவன்படைப்பித்திருக்கிறானென எ-று. 24

† இவ்விரண்டு செய்யுட்களும் ஒரு தொடர்.

பொன்ஞெடு மணியுண்டாஞற் புலேஞனுங்கிளே ஞெனென்று, தன்னேயும் புகழ்ந்துகொண்டு சாதியின் மணமுஞ் செய்வார், மன்னராயிருந்தபேர்கள் வகை கெட்டுப்போவாராயின், பின்னேயுமாரோவென்று பேசு வாரேசுவாரே.

(இ-ள்) பொருளும் புகழும் (ஒருவனுக்கு உண்டாஞல்) அவன் புலேயஞகிலும் தன்சுற்றத்தானென்று புகழ்ந்துகொண்டு உயர்ந்த ஜாதியிலும் மணமுடிப்பார்கள்; அரசராயிருந்தவரும் யாதொரு வழியுமின்றிக் கெட்டுப்போவாராகில் அவரை யாரோவென்று இகழ்ந்துபேசுவார்கள் எ-று. 25

கலிவிருத்தம்.

வேதமோதிய வேதியர்க் கோர்மழை
நீதிமன்னர் நெறியினுக் கோர்மழை
மாதர்கற்புடை மங்கையர்க் கோர்மழை
மாதமூன்று மழையெனப் பெய்யுமே.

(இ-ள்) வேதமோதுகின்ற அந்தணருக்கு ஒருமழை, நீதிவழிதப்பாத அரசர்களுக்கு ஒருமழை, அழகிய கற்பிற்சிறந்த மங்கையருக்கு ஒருமழை ஆக ஒவ்வொருமாதத்திலும் மூன்றுமழை வருஷிக்கும். 26

அரிசிவிற்றிடு மந்தணர்க் கோர்மழை
வரிசைதப்பிய மன்னருக் கோர்மழை
புருடனேக்கொன்ற பூவையர்க்கோர்மழை
வருடமூன்று மழையெனப்பெய்யுமே.

(இ-ள்) தற்காலம் அரிசிவிற்று ஜீவனஞ்செய்கின்ற பிராமணர்களுக்கு ஒருமழை, நியாயந்தவறிய ராஜர்களுக்கோர்மழை, கணவனேக்கொல்லும் பெண்களுக்கு ஒருமழையாக ஒவ்வொரு வருடத்திலும் மூன்றுமழை பொழிகின்றன எ-று. 27

## அறுசீர் விருத்தம்.

திருப்பதி மிதியாப்பாதஞ் சிவனடிவணங்காச்செ ன்னி, இரப்பவர்க் கீயாயாக்கைகளினிய சொற்கேளாக் காது புரப்பவர் தங்கள் கண்ணீர் பொழிதறச் சாகாத் தேகம், இருப்பினும் பயனென்காட்டி லெரிப்பினும் பயனில்லைதானே.

(இ-ள்) ஸ்ரீ சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திவ்யக்ஷேத்திரங்களை மிதியாதான் பாதமும், சிவபெ ருமானுடைய பாதத்தை வணங்காதான் தலையும், யா சிப்பவர்க்குக் கொடாதான் கைகளும் இனிமையான சொற்களைக் கேளாதான் செவியும், தங்களை இரக்ஷிக் கின்றவர்கள் கண்களிலிருந்து ஜலமொழுகப் பார்த்து உயிர் கொடாதான் தேகமும் இருந்தும் பயனென்ன காட்டில்வைத் தெரித்திடினும் பயனில்லை எ-று. 28

தன்னுடல் தனக்கொன்றீந்தால் தக்கதோர் பய னதாகும், மின்னில் வேசிக்கீந்தால் மெய்யிலே வியா தியாகும், மன்னியவுறவுக்கீந்தால் வருவது மயக்கமா கும் அன்னியராபத்துக் கீந்தா லாருயிர்க்குக் குதவி யாமே.

(இ-ள்) தன் தேகத்துக்கு ஒன்றைக் கொடுக்கில் அதற்குத்தக்க பயனுண்டாகும், மின்னலைப்போல அ ன்பைக்காட்டிமறைக்கும் இயல்புள்ள வேசையருக் குக் கொடுத்தால் தேகத்திற்பிணியுண்டாகும், பொருந் திய உறவினருக்குக் கொடுத்தால் மனமயக்கமே வரு வதாகும், அன்னியருக்குக் கொடுத்தால்சார்ந்த உயிர்த் துணையாகும் எ-று. 29

## பதினான்குசீர் விருத்தம்.

படியினப்பொழுதேவதைத்திடும்பச்சைநாவியை நம்பலாம், பழிநமக்கென வழிமறித்திடு பழைய நீலி யைநம்பலாங், கொடுமதக்குவ டெனவளர்ந்திடு மதகு குஞ்சரத்தையு நம்பலாங், குலுங்கப்பேசி நகைத்தி

டுஞ் சிறு குமரர்தம்மையு நம்பலாங், கடையிலக்கமு மெழுதிவிட்ட கணக்கர் தம்மையும் நம்பலாங், காக் கைபோலீவிழிபார்த்திடுங்குடி காணியாளரை நம்பலாம் நடைகுலுக்கியுமுகமினுக்கியு நகை நகைத்திடு மாத ரை, நம்பொணுது மெய் நம்பொணுதுமெய் காணு மே.

(இ-ள்.) உலகத்தில் உண்டபொழுதே கொல்லத் தக்க விஷத்தையும், பழியைக்கருதாது ஓர் வணிகனை வழிமறித்துக் கொலைசெய்த பழயனூர் நீலியையும் கொடியமும்மதங்களையுடைய மலைபோன்று வளர்ந்தி ரானின்ற யானையையும்,,குலுக்கிப்பேசி சிரித்து ஏமா ற்றும் யவ்வனச் சிறுவரையும் குடிகளுக்குக் கணக்கி லுள்ள வணயத்தைக்காட்டாமல் மோசவகையாய் தான் எழுதிவைத்த கட்டுத்தொகையைக்காட்டி வஞ் சிக்கும் கணக்கர்களையும், ஒரே விழியையுடையதான காக்கையைப்போல் பயிரிடுங் குடிகளுக்கு யாதொரு ஆதாயமுங் கிட்டாதபடி கட்டிக்காக்கும் காணியாட்சி யையுடையவரையும் நம்பலாம், நடக்கிற போதே கு லுக்கி முகத்தில் மஞ்சள் முதலிய வற்ருல் மினுக்கி பற்கள் தெரிய நகைத்துத் திரிகின்றமாதர்களை நம்பக் கூடாது உண்மை உண்மை உண்மை எ-று

கலிவிருத்தம்.

வண்டுகளிருந்திடின் மதுவையுண்டிடுந்
தண்டமிழிருந்திடிற் சங்கஞ்சேர்ந்திடுந்
குண்டுணியிருந்திடிற் கோள்கள்மிஞ்சிடும்
பெண்டுகளிருந்திடிற் பெரிய சண்டையாம்

(இ-ள்) வண்டுகளிருந்தால் தேனையுண்ணும், அழகிய தமிழிருந்தால் அநேக கூட்டத்தினர் உறவு ண்டாம். குண்டுணிகளிருந்தால் கோள்களே மிகுதி யுண்டாம், பெண்டுகள் பலர் கூடியிருந்தால் பெரிய சண்டை சச்சரவுகளுண்டாம் எ-று.

அறுசீரடியாசிரிய விருத்தம்

கற்புடை மாதர்கொங்கை கவரிமான் மயிரின்கற்றை, வெற்புறு வேங்கையின்றோல் வீரர்கை வெய்யகூர்வேல், அற்பதம் பொருள் கடாமு மவரவரிறந்த பின்னே,பற்பலர் கொள்வாரிந்தப் பாரினி லுண்மை காணே.

(இ-ள்) கற்புள்ள பெண்களின் மூலே, கவரிமான் மயிர்முடி, மலையிலுள்ள வேங்கையின் தோல், சித்த வீரர்களின் கையிலுள்ள வேல் அற்பர்களிடத்திலுள்ள பொருள் இவையாவும், அவரவர் உயிர் நீங்கிய பின்னே பலருங் கைக்கொள்வார்கள், இவை உலகத்தில் சத்தியமே எ-று. 32

வீணர் பூண்டாலுந் தங்கம் வெறும்பொய்யாமேற்பூச்சென்பார், பூணுவார் தராப்பூண்டாலும் பொருந்திய தங்கமென்பார், காணவே பனைகீழ் பாற்குடிக்கினுங் கள்ளேயென்பார், மாணுலகத்தோர்புல்லர் வழங்குரைமெய்யென்பாரே.

(இ-ள்) அற்பர்கள் தங்கத்தை அணிந்திருந்தாலும் கண்டவர்கள் தங்கமல்ல மேற்பூச்சென்பார்கள் பூணத்தக்க செல்வர்கள் தராபித்தளை முதலிய நகைகளையணிந்திருந்தாலும் உயர்ந்ததங்கமென்பார்கள், பார்க்கப்பனை நிழலிலிருந்து பாலைக்குடித்தாலும் கள்குடித்தாரென்பார்கள், பெருமை தங்கிய உலகத்தோர் அறிவீனருரைக்கும் மொழிகளையே மெய்யென்பார்கள் எ-று. 33

கலி விருத்தம்.

ஓரிரியேமீனுவந் தாணிமுத்தையோ
நாரியேகண்பிழை நாட்டிலையோ
பாரியகணவனைப் பழுதுரைத்தே
நீரிலேயிருப்பது நிலைமையல்லவே,

(இ-ள்.) கணவனை இகழ்ந்து நீங்கிவந்த ஒரு பெண் ஓநரியே! ஓர்மீனையிச்சித்து வாயிலிருந்த உணவையிழந்தனையே யாதுகாரணமென்ன, அந்நரி ஓ பெண்ணே! ஏதேனுந் தவறுதல் உலகத்திலில்லையா? நீ பெருமை தங்கிய புருடனையிகழ்ந்து இத்தன்மையிலிருப்பது உன்தன்மைக்கழகல்லவே என்றது எ-று 34

## அறுசீரடியாசிரிய விருத்தம்.

சம்புவேயென்னபுத்தி சலந்தன்ல் மீனைநம்பி, வம்புறுவடத்தைப்போட்டு வானத்தைப் பார்ப்பதேனோ, அம்புவி மாதேகேளாயரசனையகலவிட்டு, வம்பனைக்கைப்பிடித்தவாறுபோலாயிற்றன்றோ —

(இ-ள்) நரியே! என்னமதியால் ஜலத்திற்றுள்ளிய மீனைநம்பி நாற்றமுள்ள மாமிசத்துண்டையிழந்து ஆகாயத்தை எட்டிப்பார்க்கின்றனை யாதுகாரணமென்று கேட்ட பெண்ணைப்பார்த்து அந்த நரி உலகத்தில் மெச்சத்தக்கபெண்ணே! தன் நாயகனாகிய அரசனை யகலவிட்டு மற்றொரு புருஷனைக் கைப்பிடித்தவாறு போலாயிற்றென்றறிவாயாகவென்றது. () 35

மூப்பிலாக் குமரிவாழ்க்கை முனையிலா வரசன் வீரங், காப்பிலாவிளைந்தபூமி கரையிலாதிருந்தவேரி கோப்பிலான் கொண்டகோலங் குருவிலான் கொண்ட ஞானம், ஆப்பிலாச்சகடுபோலே யழியுமென்றுரைக்கலாமே.

(இ-ள்) தனக்குமூத்தோரில்லாமற்றனியேவாழும் பாலியப்பெண்வாழ்வும், கோபமில்லாத அரசன் வீரமும், காத்தலில்லாமல் விளைந்த பூமியும், கரையில்லாதிருந்த ஏரியும், தன்னிடம் வேண்டியவைகளமைதலில்லாதவன்கொள்ளும்டம்பமும், ஆசானுமில்லாதவன்கொண்ட ஞானமுமாகிய இவையாவும் அச்சாணியில்லாத வண்டிபோலே அழிந்து போமென்று சொல்லலாம் எ-று. 36

### ஒரு பெண் நடையைப்பற்றிக் கூறியது.

#### சந்தக்கலி விருத்தம்.

பொன்னின்மணி கிண்கிணி சிலம்பொலிபுலம்ப, மின்னுமணி மேகலைகள்மெல்லெனவொலிப்பச்,சின்னமலர் கொண்டுசில சேடியர்கள் சூழ, அன்னமென வல்லவென வாமென வுரைத்தார்.

(இ-ள்) பொன்மணிகளுஞ் சதங்கைமணிகளுஞ் சிலம்புகளுஞ் சப்திக்கப், பிரகாசிக்கின்ற மணிமேகலைகள் மெதுவாய் ஒலிக்க அரும்புமலர்களைக் கொண்டுசில பாங்கியர்கள் சூழ்ந்துவர நடக்கின்றவள் அன்னமோ அல்லவோவென்று கண்டோர் கூறினர். 37

#### அறுசீரடியாசிரிய விருத்தம்.

கானலை நீரென்றெண்ணிக் கடுவெளிதிரியுமான் போல்,பூரணுமிலவுகாத்தமதியிலாகிள்ளையேபோல், தேனினைக்கண்டுதும்பி தியங்கிய தகைமையேபோல் நானுனை யரசென்றெண்ணி நாளையும்போக்கினேனே

(இ-ள்) கானலைத்தண்ணீரென்று நினைத்து வெட்டவெளியில் ஓடித்திரியும் மான்போலவும் பழுக்குமென்று இலவுவிருக்ஷத்தைக்காத்த அறிவில்லாதகிளியைப்போலவும் கள்ளையுண்டு மயங்கிய வண்டுகள் போலவும் நானுன்னை ராசனென்றுகருதி நாளைவீணுகப் போக்கினேன் எ-று. 38

### தலைவனைப்பிரிந்ததலைவி வருந்தல்,

#### குறுங்கழி நெடில் விருத்தம்

சங்கு முழங்குந் தமிழ்நாடன்றன்னை நினைந்த போதெல்லாம், பொங்குகடலு முறங்காது பொழுதோர் நாளும் விடியாது, திங்களுறங்கும் புள்ளுறங்குந் தென்றலுறங்குஞ் சிலகாலம், எங்குமுறங்கு மிராக்காலமென் கண்ணிரண்டு முறங்காதே.

(இ-ள்) சங்குகள் முழங்காநின்ற எனது தமிழ் நாட்டதிபனை நினைக்கிறபோதெல்லாம் அலைகள் வீசாநின்ற சமுத்திரந் தூங்குவதில்லை, பொழுது விடிகிறதில்லை, சந்திரனும் அன்றில் குயில் முதலிய பக்ஷிகளும் தென்றற்காற்றும் சிலகாலம் தூங்கும், பேய்முதலிய சகலபிராணிகளுக்குந் தூங்கத்தக்க விராக்காலத்தில் யாதுகாரணமோ என் கண்கள் மட்டும் உறங்குவதில்லை எ-று. 39

அறுசீரடியாசிரிய விருத்தம்.

அரவினையாட்டுவாரு மருங்களிறூட்டுவாரும், இரவினிற்றனிப்போவாரு மேரிநீர் நீந்துவாரும், விரைசெறிகுழலியான வேசையை விரும்புவாரும், அரசனைப் பகைத்திட்டாரும் மாருயிரிழப்பர்தாமே.

(இ-ள்) பாம்பாட்டுகிறவர்களும்; அரிய யானைப் பாகர்களும், இராத்திரி தனிவழி செல்கின்றவர்களும் தடாகஜலத்தில் நீந்துகின்றவர்களும் வாசனை நிறைந்த கூந்தலையுடையவேசியரை இச்சிக்கின்றவர்களும், அரசர்களைப் பகைத்துக்கொண்டவர்களும் பொருந்திய உயிரை இழப்பார்கள் எ-று. 40

வாழ்வது வந்தபோது மனந்தனில் மகிழவேண்டாம். தாழ்வது வந்ததானுற்றளர்வரோ தக்கோர்மிக்க ஊழ்வினைவந்ததானு லொருவரால் விலக்கப்போமோ ஏழையாயிருந்தோர் பல்லக்கேறுதல் கண்டிலீரோ.

(இ-ள்) வாழ்வு வந்தகாலத்தில் மனதில் மகிழ்ச்சியை வைக்கக்கூடாது· தாழ்வுவந்ததென்று வருந்தவுங்கூடாது, இதுமேலோர் செய்கை, ஊழ்வினையால் வருஞ்செய்கைளை யாரால் விலக்கக்கூடும் ஏழையாயிருந்தவர்கள் உடனேசிவிகையிலேரத்தக்கசெல்வவான்களாதலை நீங்கள் பார்த்ததில்லையா? 41

அறுசீர் விருத்தம்.

பருப்பதங்கள் போனிறைந்திடு நவமணிப் பலன்களைக் கொடுத்தாலும், விருப்ப நீங்கிய கணவரைத்தழுவுதல் வீணதாம் விரையார்ந்த, குருக்குசந்தனக் குழம்பினையன்பொடு குளிர்தீந்தேழமை செப்பவுமாகாதே.

(இ-ள்) மலைகளைப்போலக்குவியல் குவியலாகவொன்பதுவகை இரத்தினங்களையும் பலனாகக் கொடுத்தாலும் விருப்பமில்லாதகணவரைக் கூடுதல் வினையாம்வாசனை பொருந்திய மிகுந்த செருக்குடைய அற்பர்கள் சந்தனக்குழம்பை ஆசையோடு குளிர்ச்சிதரப் பூசினாலும் அவர்கள் சினேகத்தை வாயினால் சொல்லவுங்கூடாது எ-று, 42

கலிவிருத்தம்.

பெருத்திடுசெல்வமாம் பிணிவந்துற்றிடில், உருத்தெரியாமலே வொளிமழுங்கிடும், மருந்துளதோவெனில் வாகடத்திலை, தரித்திரமென்னுமோர் மருந்திற்றீருமே.

[இ-ள்] ஒருவனுக்குப் பெருத்த செல்வச் செருக்கென்னும்வியாதி வந்து கூடினால் உருவந் தெரியாமல் கண்ணொளி மயங்கிவிடும். இதற்கு மருந்துள்ளதோவென்று ஆராயில் வைத்தியர் கூறிய வாகடங்களிலில்லை. தரித்திரமென்று சொல்லத்தக்க மருந்தினால் உடனே தீரும் எ-று. 43

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அத்தியின் மலரும் வெள்ளையாக்கைகொள் காகைதானும், பித்தர் தம் மனமு நீரிற் பிறந்தமீன் பாதந்தானும், அத்தன்மால் பிரமதேவனாலளவிடப் பட்டாலுஞ் சித்திரவிழியார் நெஞ்சந் தெரிந்தவரில்லை கண்டீர்

(இ-ள்.) அத்திமரத்தின் பூவையும் வெள்ளை நிறங்கொண்ட காக்கையையும் பைத்தியக் காரர் மனதை

யும் ஜலத்திற்பிறந்த மச்சங்களின் பாதத்தையும் சிவன் விஷ்ணு பிரமதேவன் முதலியவர்களால் அளவிடப்பட்டு ஓர்வேளை கண்டறிந்தாலும் சித்திரத்தையொத்த கண்களையுடைய பெண்களின் நெஞ்சத்தின் கருத்தைக்கண்டு தெளிந்தவர்கள் உலகத்திலில்லை. 44

† சொல்லுவார் வார்த்தைகேட்டுத் தோழமை யிகழ்வார் புல்லர், நல்லவர் விசாரியாமற் செய்வாரோ நரிசொற்கேட்டு, வல்லியும் பசுவும்கூடி மாண்டதோர் கதையைப்போல, புல்லியரொருவராலே போகுமே யாவுநாசம்.

(இ-ள்.) அற்பர்கள் பிறர்சொல்லும் வார்த்தைகளைக்கேட்டு சினேகத்தை யிகழ்வார், மேலானவர்கள் நன்றாய் விசாரியாமல் ஒன்றையுஞ் செய்வாரோ செய்யார். ஓர் நரியின் சொல்லைக்கேட்டு ஒரு புலியினிடத்துப் பசு சேர்ந்து இறந்துபோன கதையைப்போல் அறிவீனராலே யாவும் நாசமாய்ப்போம். 45

கதலிவீரர் களத்திடைவையினுங், குதலைவாயிற் குழவிகள் வையினுங், மதனலீலையின் மங்கையர்வையினும் இதமுறச்செவிக் கின்பம் விளையுமே.

[இ-ள்] விருதுகளைப்பெற்ற சுத்தவீரர்கள் யுத்தகளத்தினிடத்துத்திட்டினாலும், மழலைச் சொற்களையுடைய குழந்தைகள் வைதாலும் மன்மதலீலாவினோதக்கலவியில் மங்கையர்கள் நிந்தித்தாலும் இனிமையுறச்செவிக்கு இன்பமே உண்டாகும் எ-று 46

† புத்திமான்பலவானவான் பலமுள்ளான் புத்தியற்றால், எத்தனை விதத்தினாலு மிடராது வந்தேதீரும், மற்றொரு சிங்கந்தன்னை வருமுயல் கூட்டிச்சென்றே, உற்றதோர் கிணற்றிற்சாயல்காட்டியவுவமைபோலாம்

[இ-ள்] ஓர்சிங்கத்தை ஒருமுயல் கூட்டிக்கொண்டுபோய் ஓர் கிணற்றில் அதன் சாயலைக் காட்டிக்கொ 47

† இவ்விருகதைகளும் பஞ்சதந்திரத்தில் உள்ளன.

ன்ற உவமைக் கதைபோல எவ்வளவு வீரத்தன்மையுள்ளவனும் புத்தியில்லாவிடில் எந்த விதத்தினாலும் அவனுக்குத் துன்பமேவந்துசேரும். ஆதலால் புத்தியுள்ளவனே பலவான் எ-று. 47

மானமுள்ளோர் கடன்றோர் மயிரறினுயிர்வாழாத, கானுறு கவரிமான்போற் கனம்பெறுபுகழே பூண்பார், மானமொன்றில்லார்தாமுமழுங்கலாய்ச் சவங்கராளாகி, ஈனமாங் கழுதைக்கொப்பா யிருப்பாரென் றுரைக்கலாமே.

[இ-ள்] தன்னிடத்திலுள்ள ஓர் மயிர் அறுந்தாலும் உயிரைவிடுகின்ற கவரிமானைப்போல மானமுள்ளவர்கள் எப்பொழுதும் புகழையே விரும்புவார்கள், மானமில்லாதவர் புத்திமழுங்கிச் சவங்களாகி ஈனமடைந்த கழுதைக்கொப்பாயிருப்பர். 48

கலி நிலைத்துறை,

கழுதைகாவெனக் கண்டுநின்றுடிய வலகைதொழுதுமீண்டுமக்கழுதையைத்துதிசெய்வதுதான், பழுதிலாநமக்கார் நிகராமெனப் பகரும், முழுதுமூடரைமூடர்கொண்டாடிய முறைபோல்.

[இ-ள்] அறிவில்லாதமூடர்களை அவரினுந்தாழ்ந்த முழுமூடர் கொண்டாடிப் புகழ்வது எவ்வாறெனில், ஒரு கழுதை காவென்று கத்தியதைப்பார்த்து அதற்கிசைய நின்றுடிய ஓர்பிசாசு திரும்பவும் அந்த கர்த்தபத்தை வணங்கித்துதிசெய்ய அதுகுற்றமில்லாக் குரலையுடைய நமக்கு ஒப்பானவர்கள் யாரெனச் சொல்வதுபோலிருக்கும் எ-று. 49

அறுசீரடியாசிரியவிருத்தம்.

ஆசாரஞ்செய்வராகிலறிவொடு புகழுமுண்டாம், ஆசாரதன்மையாலு லவனியிற்றேவராவர், ஆசாரஞ்செய்யாராகிலறிவொடு புகழுமற்றுப் பேசார்போற்பேச்சுமாகி பிணியொடுநரகில் வீழ்வார்.

(இ-ள்) ஒழுக்கந்தவருது செய்வாராகில் அவருக்குள்ள ஞானத்தோடு புகழுமுண்டாம் அவ்வொழுக்கமே நன்மையாய் அதிகரிக்குமாகில் அவரே உலகத்தில் தெய்வமாவார் ஒழுக்கந்தவறுவாராகில் அறிவோடுநல்ல கீர்த்தியுமற்று ஊமையர்போல் பேசுவாராகில் இம்மையிற் பிணியாலுழன்று மறுமையில் நரகத்தையடைவார்கள் எ-று. 50

செல்வம்வந்துற்றபோது தெய்வமுஞ் சிறிதுபேணார், சொல்வதையறிந்துசொல்லார் சுற்றமுந்துணையும்பேணார், வெல்வதே கருமமல்லால் வெம்பகைவலிதென்றெண்ணார், வல்வினை விளைவும்பாரார் மண்ணின்மேல் வாழுமாந்தர்.

(இ-ள்) உலகத்தில் வாழும் மானிடருக்குச் செல்வமானது மிகுதியாய் வந்துசேர்ந்தபொழுது கொஞ்சமேனுந் தெய்வத்தையுங் கருதார், சொல்லுகிறதைக் கேட்டு பதிலுஞ்சொல்லார், பந்துமித்திரர்களையுங் கவனியார் எக்காரியத்திலும் ஜெயத்தையேகருமமாகக் கருதுவாரேயல்லாமல் வெவ்வியபகைவருடைய வலிமையை யெண்ணார்கள், வலிய பாவவினையையும் பாரார் எ-று. 51

கலி விருத்தம்.

யானையைச்சலந்தனிலிழுத்தவக்ரா, பூனையைக் கரைதனிற் பிடிக்கப்போகுமோ, தானையுந்தலைவருந் தலம்விட்டேகினுல், சேனையுஞ் செல்வமுந் தியங்குவார்களே,

[இ-ள்] ஜலத்திலிருந்து ஓர்பெரியமதயானையைக் கடித்திழுத்த முதலையானது கரையிலுள்ள ஒருபூனையைப் பிடிக்கக்கரையிற் சொல்லமாட்டாது, (அதுபோல) அரசர்களும் சதுரங்கசேனைகளுடன் தங்களிருப்பிடம் விட்டுச்சென்ருல் செல்வமிகுந்த சேனையுடன் தியங்குவார்கள் எ-று. 52

## அறுசீர் விருத்தம்.

கொண்டநற்கலைகளோடுங் குணமிலாக் கோதை மாரை, கண்டுவிடுதிருப்பதல்லாற் கனவிலும் புல்ல வொண்ணு, துண்டேன மதுவையுண்ண வோவியம் பூ வில்வீழ்ந்தே, வண்டினம் பட்டபாடு மனிதரும் படு வர்தாமே.

(இ-ள்) நல்லசாஸ்திரப்பயிற்சியும் நற்குணமுமில் லாத மங்கையர்களைக் கண்ணால் நிதானித்துப்பார்த்து அவர்களை விலக்கவேண்டுமே யல்லாமல் கனவிலாயி லுஞ் சேரவொண்ணாது, சேருவரேல் எழுதிய சித்திர மாகிய தாமரையில் தேனுண்டென்று வீழ்ந்து வருந் திய வண்டுக்கூட்டங்கள் படும்பாடு அவர்களும் அ டைவார்கள் எ-று. 53

† மயில்குயில்செங்காலன்னம் வண்டுகண் ணாடிப் ன்றி, அயிலெயிற்றரவுதிங்க ளாதவனாழி கொக்கோ, இரும்விண்கமலம் பன்மூன்றுகுணமுடையோர் தம் மை, இயலுறு புவியோர்போற்று மீசனென்றெண் ணலாமே.

(இ-ள்) மயில், குயில், சிவந்த கண்களையுடைய அன்னம், வண்டு, கண்ணாடி, பன்றி, கூர்மைபொருந் திய பற்களையுடைய பாம்பு, சந்திரன், சூரியன், சமுத் திரம், உயர்ந்த ஆகாயம், தாமரை இந்தப்பதின்மூன் றுபொருள்களினிடத்துமுள்ள குணங்களை யடைந்தவர் களை உலகத்தவரெல்லாம் போற்றும் ஈசனென்று சொ ல்லலாம் எ-று. 54

## கலி விருத்தம்.

தெருளிலாக் கலையினர் செருக்குமாண்மையும், பொருளிலாவறிஞனின் பொறியடக்கமும், அருளிலா வறிஞர்தம் மௌனநாசமும், கருவிலா மங்கையர் கற் புமொக்குமாம்.

---

† இவைகளின் குணங்களை விரிக்கிற் பெருகும், ஆசிரியர்களிடத்துக் கேட்குணர்க,

(இ-ள்) தெளிவில்லாத கல்வியாளர்களுடைய அகங்காரமும் மனோஊக்கமும் பொருளில்லாத தரித்திரர்களுடைய மெய் வாய் கண் மூக்கு செவியென்கிற ஐம்பொறிகளினடக்கமும், அருளில்லாத ஞானிகளின் மவுனநாசமும் மகப்பேறில்லாத மங்கையர்கள் கற்புமாகிய இவைகள் ஒன்றுக்கொன்று சமமாம் எ-று. 55

மங்குலும் பதினாயிரம்யோசனைமயில்கண்டு நடனமாடும், தங்குபானு நூறாயிரம் யோசனை தாமரை முகம்விள்ளும், திங்களாதவற் கிரட்டி யோசனையுறச் சிறந்திடுமரக்காம்பல், எங்ஙனாயினுமன்பராயிருப்பவ ரிதயம்விட்டகலாரே.

(இ-ள்) ஐம்பதினாயிரம் யோசனை தூரத்திலுள்ள மேகத்தைக்கண்டு மயில் நடனம் பண்ணும், நூறாயிரம் யோசனை தூரத்திலுள்ள சூரியனைக் கண்டு தாமரை முகமலர்ச்சியைக் காட்டும், இருநூறாயிரம் யோசனை தூரத்திலுள்ள சந்திரனைக்கண்டு செவ்வல்லி மலர்ந்து சிறப்பையடையும், எவ்வளவு தூரத்திலிருப்பாராயினும் அன்பராயிருப்பவ ரிருதயத்தைவிட்டு அகலார்கள் எ-று. 56

சந்திரனில்லாவானம் தாமரையில்லாப்பொய்கை மந்திரியில்லாவேந்தன் மதகரியில்லாச்சேனை சுந்தரப்புலவரில்லாத் தொல்சபை சுதரில்லாவாழ்வு தந்திகளில்லாவீணை தனமிலாமங்கை போலாம்.

(இ-ள்) சந்திரனில்லாத ஆகாயம், தாமரையில்லாத் தடாகம், மந்திரியில்லாத அரசன், மலைபோலும் மதயானையில்லாத சேனைகள், அழகிய வித்வான்களில்லாத சபை, மக்களில்லாத வாழ்க்கை, தந்திநரம்பில்லாத வீணை; இவையாவும் ஸ்தனமில்லாத மங்கையர் சுகத்தைப்போல் வீணாகும் எ-று. 57

## அறுசீரடியாசிரிய விருத்தம்

மூடனை மூர்க்கன் கொன்றால் மூர்க்கனை முனி தான் கொல்லும், மடவனை வலியான் கொன்றால் மற விதானவனைக்கொல்லும், தடவரை முலைமாதேயித்தர ணியி லுள்ளோர்க்கெல்லாமடவனை அடித்தகோலும் வலியனையடிக்குங்கண்டாய்.

(இ-ள்) மூடனை அகங்காரகுணமுள்ள மூர்க் கன் கொன்றால் அம்மூர்க்கனை அவனிலும் அதிக கோபமுடைய ஒருவன் கொல்வான், அறிவில்லாத ஏ ழையை அறிவுள்ளவன் கொல்வானாகில் அவனை இ யமன் கொல்வான், விசாலித்தமலை போலுமுலையையு டையவளே! ஏழையை அடித்தகோலே பலவானையும் அடிக்கும் என்றறிவாயாக எ-று. 58

## கலிவிருத்தம்

குரைகடல்வறுமையுங் குறத்தியுண்மையும்
நரையறமருந்தையுண் டிளமைநண்ணலும்
விரைசெறிகுழலினுள் வேசியாசையும்
அரையரன்பமைவது மைந்துமில்லையே.

(இ-ள்) சப்திக்கா நின்ற சமுத்திரத்திற்கு ஜலதரி த்திரமும், (திருடுந்தொழில்கற்ற) குறத்திகளின் சத்திய மும், நரைதிரைகளறும்படி அவிழ்த முண்டு பாலடப ருவமடைதலும், வாசனைசெறிந்த கூந்தலையுடைய வேசியர்களுக்கு ஒருவர்மேலுண்மையான ஆசையுண் டாதலும், அரசர்கள் ஒருவரிடத்தில் நீங்காத அன்பு டையவராயிருத்தலும் ஆகிய இவைஐந்தும் அடைவ தற்கரிது எ-று. 59

பொருளிலார்க் கின்பமில்லை புண்ணியமில்லையெ ன்று மருவியகீர்த்தியில்லை மைந்தரிற் பெருமையில்லை கருதியகருமமில்லை கதிபெற வழியுமில்லை பெருநிலந் தன்னிற் சஞ்சாரப்பிரேதமாய்த்திரிகுவாரே,

(இ-ள்) பொருளில்லாதவர்க்கு இன்பம் புண்ணியம் பொருந்தியகீர்த்தி மக்களாற் பெருமை நினைத்தவற்றை நினைத்தபடி முடிக்கும்வல்லமைமோக்ஷமடையும்வழி இவைகள் கிடையா, அவர்பெருத்த உலகத்தில் நடக்குந்தன்மையுள்ள பிணமென்று சொல்லும்படி திரிவார். 60

தூம்பினுட் புதைத்தகல்லுந் துகளன்றிச் சுடர்கொடாது, பாம்புக்குப் பால்வார்த்தாலும் பழகினுநன்மைதாரா, வேம்புக்குத் தேன்வார்த்தாலும் வேப்பிலை கசப்புமாறு, தாம்பல நூல் கற்றாலுந் துற்சனர் நல்லோராகார்.

(இ-ள்) வழியில் பலபேர் மிதிக்கும்படி புதைத்த கல்லாயிருந்தாலும் தேய்ந்து களங்கமின்றிப்பிரகாசத்தைக்கொடாது பாம்புக்குப்பால்வார்த்து தினந்தோறும் அதனிடம் பழகிவந்தாலும் நன்மையைத்தராது வேம்புக்குத் தேனைவார்த்து வளர்த்தாலும் அதின் கசப்பு மாறாது, துற்சனர்கள் பல நூலைக்கற்றாலும் நல்லோராகார்கள் எ-று. 61

கல்லாத மாந்தரையும் கடுங்கோபத்துரைகளையுங் காலந்தேர்ந்து, சொல்லாதவமைச்சரையுந் துயர்க்குதவாத் தேவரையுஞ் சுருதி நூலில் வல்லாவந்தணர் தமையுங் கொண்டவனோ டெந்நாளும் வலதுபேசி, நல்லார்போ லருகிருக்கு மனைவியையுமொருநாளுநம்பொணாதே.

(இ-ள்) கல்வியில்லாத மனிதர்களையும் மிகுந்த கோபமுள்ள அரசர்களையும், வருங்காலமறிந்து சொல்லாத மந்திரிகளையும், துன்பம் வந்தவிடத் துதவிசெய்யாத தெய்வங்களையும் வேதநூலில் வல்லவரில்லாத பிராமணர்களையும், கணவனோடு எந்தநாளிலும் வல்லமைபேசி நல்லவர்களைப்போல் அருகிலிருக்கும் மனைவியையும் ஒருநாளும் நம்பக்கூடாது. 62

தேளது தீயில்வீழ்ந்தாற் செத்திடா தெடுத்தபேரை, மீளவே கொடுக்கினாலே மெய்யுறக் கொட்டலேபோல், ஏளனம் பேசித்தீற்குற்றிருப்பதை யெதிர்கண்டாலும், கோளினர் தமக்குநன்மை செய்வது குற்றமாம்.

(இ-ள்) தேளானது நெருப்பில்விழுந்தால் இறந்துபோமென்று கருதி எடுத்தவரை கொடுக்கினாலே துன்பமுறும்படி கொட்டுதல்போல் கேலிகள்பேசிப் பலவிததீங்குகளைக்கொண்டு இருப்பதை நேராகப்பார்த்தும் உலகத்தில் கோளுடையவர்க்கு நன்மை செய்தால் குற்றமே உண்டாகும் எ-று. 63

அறிவுளோர் தமக்குநாளு மரசருந் தொழுதுவாழ்வார், நிறையொடு புவியிலுள்ளோர் நேசமாய் வணக்கஞ் செய்வார், அறிவுளோர் தமக்குயாதோ ரசடது வருமேயாகில், வெறிய ரென்றிகழாரென்று மேதினியுள்ளோர்தாமே.

(இ-ள்) அறிவுடையவர்களுக்கு அரசரும் வணங்கி வாழ்வார்கள், உலகத்தவர்களும் உண்மையான நேசத்தோடு பணிதல்செய்வார்கள், அவருக்கு யாதேனும் ஒருகுற்றம் நேரிட்டாலும் வெறுக்கத்தக்கவரென்று இகழ்ச்சிசெய்யார். இவ்வுலகினர் செய்கை இத்தன்மையதாம் எ-று. 64

குருவுபதேசமாதர் கூடியவின்பந்தன்பால், மருவியநியாயங்கல்வி வயதுதான் செய்ததன்மம், அரியமந்திரம் விசார மாண்மை யிங்கிவைகளெல்லாம், ஒருவருந் தெரியவொண்ணா துரைத்திடவழித்துபோமே.

(இ-ள்.) ஆசிரியர் செய்தவுபதேசம் ஸ்திரீயினிடத்து அனுபவித்த இன்பம் தன்னிடத்துப் பொருந்திய நியாயம் கல்வி ஆயுள் தன்னாற்செய்த தருமம் அரிதாகிய மந்திரம் துன்பம் வல்லமை இவைகளெல்லாம் ஒருவருக்குந் தெரியக்கூடாது. வெளிவிடில் போம் எ-று, 65

இடுக்கிஞல் வறுமையாகி யேற்றவர்க்கிசைந்தசெல்வங், கொடுப்பதே மிகவுநன்று குற்றமேயின்றிவாழ்வார், தடுத்ததை விலக்கிஞேர்க்குத் தக்கநோய் பிணிகளாகி, உடுக்கவே உடையுமின்றி யுண்சோறும் வெல்லமாமே.

(இ-ள்) துன்பமடைந்து தரித்திரத்தால் யாசிப்பவர்க்கு மனமகிழ பொருள்கள் கொடுக்கின்றவரைத் தடுத்து விலக்குகின்றவர்களுக்குத் தகுதியான துன்பந்தரத்தக்க பிணியுண்டாகி உடுக்கத்துணியுமின்றி சாப்பிடுதற்குரிய அன்னமுங் கிடையாமல் வெல்லம்போலருமையாகும் எ-று. 66

மெய்யதைச் சொல்வாராகில் விளங்கிடு மேலுநன்மைவையகமதனைக் கொள்வார்மனிதரிற் றேவராவார், பொய்யதைச் சொல்வாராகிற் போசன மற்பமாகும், நொய்யரிசியர்களென்று நோக்கிடாரறிவுளோரே.

(இ-ள்.) மெய்சொல்வோரிடத்து நன்மையே விளங்கும், உலகத்தவர்களும் அவருடைய வார்த்தைகளை ஒப்புக்கொள்வார்கள், மானிடரில் அவரே தெய்வமாவார், பொய்பேசுவாரிடத்து உணவும் அற்பமாகும், நொய்யரிசி கொதிதாளா தென்னும் பழமொழிபோல பெருந்தன்மை யுடையவர்க ளல்லவென்று மதித்து அறிவுடையோரும் அவரைப்பாரார்கள் எ-று. 67

சந்தக் கலி விருத்தம்.

தந்தையுரை தட்டினவன் றயுரை யிகழ்ந்தோன் அந்தமுறுதேசிகர்த மாணையை மறந்தோன், சந்தமுறுவேதநெறி தாண்டினவனுல்வர், செந்தழலின் வாயினிடை சேர்வதுமெய் கண்டீர்.

(இ-ள்.) தகப்பன் சொல்லைத் தள்ளி நடந்தவன் தாய்வார்த்தையை இகழ்ச்சிசெய்தவன், அழகிய குருவினுக்ஞையை மறந்தவன். சந்தமுள்ள வேதநெறிகளைக் கடந்தவனுகிய இந்நால்வரும் சிவந்த அக்னிவாயின்கண்ணடைவது உண்மையென்றறியக்கடவீராக. 68

அறுசீரடியாசிரிய விருத்தம்.

நாரிகள் வழக்கதாயி னடுவறிந்துரைத்தார் சுத்தர் ஏரிபோற்பெருகி மண்மேலிருகணும் விளங்கி வாழ்வார், ஓரமேசொல்வாராகி லோங்கிய கிளையுமாண்டு, நீரவே கண்கள்ரெண்டுந் தெரியாமல்மாள்குவாரே.

(இ-ள்.) ஏழைப்பெண்கள் முறையிட்ட வழக்குகளாயிருக்கினும் நடுநிலைமையறிந்து நியாயஞ்சொல்பவரே பரிசுத்தர், அவர்கள் பெரிய தடாகம்போல் பெருகி பூமியின்மேல் இரண்டுகண்ணும் பிரகாசித்து வாழ்வார்கள். பக்ஷபாதமாய்ச் சொல்லுவரேல் அவர்கள் சுற்றமுமிழந்து இருவிழிகளுந்தெரியாத குருடராய் மயங்கி வருந்துவார்கள் எ-று. 69

முலைநலங் கூறல்.

துப்புறச் சிவந்தவாயாள் பஞ்சணையின்மீதில் ஒப்புறக் கணவனோடே யோர்லீலைசெய்யும் போது, கற்பகஞ்சேர்த்தமார்பிற் கனதன மிரண்டுந்தைத்தே அப்புறமுருவிற்றென்றே யங்கையாற்றடவிப் பார்த்தாள்.

(இ-ள்.) பவளம்போன்ற சிவந்தவாயையுடையவள் பரிசுத்தமான பஞ்சணையின்மேல் தன் கணவனோடு ஒப்பற்ற ஒருவகைக்கலவி செய்யுங் காலத்தில் மந்தாரகமளமென்பதைச் சற்றும் நினையாத தன் நாயகனது மார்பில் பருத்தமுலைகளிரண்டுந் தைத்துப்பின் புறம் ஊடுருவிப்போய்விட்டதென்று தன்னழகிய கைகளாற் றடவிப்பார்த்தாள். 70

ஏரிநீர் நிறைந்தபோதங்கிருந்தபட்சியெல்லாம் மாரிநீர் மறுத்தபோது வந்ததிலிருப்பதுண்டோ, பாரினையாளும் வேந்தன் பட்சமுமறந்தபோதே, யாருமே நிலையில்லாம லவரவரேகுவாரே,

(இ-ள்.) தடாகத்தில் ஜலமிருக்கும்போது பட்சிகளெல்லாம் வந்து கூடியிருந்தன, அந்நீர்வற்றிய போது பட்சிகள் அங்கிருப்பதுண்டோ? அதுபோல்

உலகத்தையாளும் அரசன் பட்சத்தை மறந்தபோது ஒருவரும் நிலையில்லாமல் அவரவர்கள் பட்சமுள்ள விடந்தேடிச் செல்வார்கள் எ-று.

சந்தக்கவி தெடில் விருத்தம்.

மண்ணுற்சட்டி கரத்தேந்தி மரநாய்கௌவுங் காலி னராய், அண்ணுந்தேங்கி யிருப்பாரை யறிந்தோமம்மா, பண்ணார்மொழியார் பாலடிசிற் பைம்பொற்கலத் திற் பரிந்தூட்ட, உண்ணுநின்றபோ தொருவர்க்குத வா மாந்தரிவர்தாமே.

(இ-ள்) கையில்மண்சட்டியேந்தி மரநாய் கௌவும் லட்சணமுடைய காலுள்ளவராய் எங்கு அன்னங்கி டைக்குமோவென்று ஏங்கி யண்ணுந்திருக்கிறவர்களை அம்மம்மா கண்டோம் கண்டோம், அவர்கள் யாரெ னில் இராகம்போன்ற வார்த்தையையுடைய மங்கை யர்கள் பொன்கலத்தில் பாலொடுகலந்த அன்னத்தை மிக அன்போடு ஊட்டி உண்ணுஞ்சமயத்தில் ஒருவ ருக்குங்கொடாத உலுத்தார்களே.

மண்டலத்தோர்கள் செய்த பாவமன்னவரைச் சே ரும், திண்டிற மன்னர்செய்த தீங்கு மந்திரியைச் சே ரும், தொண்டர்கள் செய்த தோஷந் தொடர்ந்துதங் குருவைச்சேருங், கண்டனமொழியாள் செய்த கன்ம முங் கணவர்க்காமே.

(இ-ள்) உலகத்தவர்கள்செய்த பாவம்அரசனைச் சாரும், வலிமையுள்ள அரசர்கள் செய்த பாவம் அ மைச்சரைச்சேரும். அடியார்கள் செய்தகுற்றம் தன் ஆசிரியனைப்பற்றும், கற்கண்டுபோலும் மொழியையு டைய மங்கையர்கள்செய்தபாவம் புருடர்களுக்காகும்.

நற்குணமுடைய வேந்தை நயந்து சேவித்தலொ ன்று, பொற்புடையமகளிரோடு பொருந்தியே வாழ்த லொன்று. பொற்பலரோடுநன் னூல் பகர்ந்துவாசித்த லொன்று, சொற்பெறுமிவைகண்மூன்று மிம்மையிற் சொர்க்கந்தானே.

(இ-ள்.) நல்லகுணமுடைய ராஜர்களை விரும்பித ரிசித்தலும்; அழகுடைய ஸ்திரீகளோடு கூடிவாழ்த லும், கல்விமான்களான நல்லாசிரியரை யடுத்துற்று தன்னையொத்த மாணாக்கர் பலரோடும் நல்ல நூல்களைக் கேட்டுச்சந்தேகமறப்பயின்று கற்றுக்கொள்ளுதலுமா கிய இந்த மூன்றுகாரியங்களும் இகத்தில் அநுபவிக் கத்தக்க சுவர்க்கபோகங்களாம். 74

வேறு.

நிட்டையிலே யிருந்துமனத்துறவடைந்த பெரி யோர்க ணிமலன்றாளைக், கிட்டையிலே தொடுத் துமு த்தி பெறுமளவும் பெரியசுகங் கிடைக்குங்காம,வெட் டையிலே மதிமயங்கிச் சிறுவருக்குமணம்பேசிவிரும் பித் தாலிகட்டையிலே தொடுத்து நடுக்கட்டையிலே கிடத்துமட்டுங் கவலைதானே.

(இ-ன்.) சதா நிட்டைபுரிந்து பற்று நீங்கி மனதி ன்கண் துறவடைந்த பெரியோர்களெல்லாம் பரமபதி யின்பதத்தைத் துதிக்கக்கிடைத்ததுமுதல் மோட்சத் தையடையும்வரையில் பெரிதான ஆனந்தத்தையடை வார்கள், கன்னியர்கள் காமமென்னும்வெப்பத்திலே புத்திமயங்கிக் கிடப்பவர்களெல்லாம் சிறுமியர்க்கு விவாகமுறைபேசி விருப்பத்தோடு தாலிகட்டுவது முதல் சுடுகாட்டிலடுக்கிய கட்டைகளின் நடுமத்தியில் கொண்டுபோய் வைக்கும்வரையில் துன்பமே யனு பவிப்பார்கள்' எ-று. 75

தலைவன்வருந்தல் எழுசீர்விருத்தம்.

அன்னம்பழித்தநடை யாலம்பழித் தவிழியமுதம்பழி த்த மொழிகள், பின்னம்பெருத்தமுலை கன்னங்கறு த்தகுழல்சின்னஞ்சிறுத்தயிடைபெண், என்னெஞ்சுரு க்கவவணெஞ்சுகற்றகலை யென்னென்றுரைப்பதினி னுன் சின்னஞ்சிறுக்கியவள் வில்லங்கமிட்டபடிதெய் வங்களுக்கபயமே

(இ-ள்-) அன்னத்தையிகழ்ந்த நடையையும், விஷத்தை நிந்தித்தகண்களையும்பொன்போலுந்தேமற் படர்ந்தபருத்தமுலைகளையும், கருநிறமாகஇருண்டகூந்தலினையும் கண்டவர்கள் அதினுட்பமென்றுமதி நீங்கும்படி மிகவுஞ் சிறுத்த இடையினையுமுடைய பெண்ணானவள் எனது மனதையுருக்கஅவள் தன்நெஞ்சிற் கற்றுக்கொண்ட சாஸ்திர வல்லபத்தை இனிநானென்னென்றுசொல்வேன் அச்சிறுக்கியால் நேரிட்ட வில்லங்கங்களுக்குத்தெய்வத்தை நோக்கிமுறையிடுவதன்றி யென்னால் செய்யத்தக்கது யாது. 76

எண்சீரடியாசிரிய விருத்தம்.

ஆவீனமழை பொழிய வில்லம் வீழ வகத்தடியாண்மெய்நோவ அடிமைசாவ, மாவீரம்புலர்வதெனவிதைகொண்டோட வழியிலே கடன்காரர் மறித்துக்கொள்ள, கோவேந் தருமுதுண்ட கடமைக்கேட்கக் குருக்கள் வந்துதட்சணைக்குக் குறுக்கேநிற்கப், பாவாணர் கவிபாடிப் பரிசுகேட்கப் பாவிமகன் படுந்துயரம் பார்க்கொணாதே.

இ-ள்) பசு கன்றைப்பெற, மழைவிடாது பெய்ய, வீடு இடிந்துவிழ, வீட்டுக்குரியமனைவி கர்ப்பவேதனைப்பட, வேலையாள் இறக்க ஈரங்காய்ந்த தென்று விதைக்கவிரை கொண்டோட, கடன்காரர் மறித்துக்கொள்ள, அச்சமயத்திலே வேளாண்மைசெய் துசாப்பிட்ட பூமிகளின் தீர்வையை வழமையான அரசர்கேட்க, அதுகாலை குருக்களானவரும் குறுக்கே நின்று தட்சணைகேட்க, கவிகளைப்பாடி வித்துவான்கள் சன்மானஞ் செய்யும்படி வினவ பாவிமகன் அடையுந் துன்பம் பார்க்கச் சகிக்காது. 77

அறுசீரடியாசிரிய விருத்தம்.

தாய்பகை பிறர்நட்பாகுகிற்றந்தையுங்கடனவாறு இல் வாய்பகைமனைவியாரு மாவழகுற்றபோது பேய்

பகை பிள்ளைதானும் பெருமை நூல் கல்லாவிட்டால், சேய்பகை யொருவர்க்காகு மென்றனர் தெரிந்த நூலோர்.

(இ-ள்.) பிறருக்கு அநுகூலமாகவுந்தனுக்குப் பகையாகவுமிருக்கின்ற மாதாவும், அதிகக்கடன்பட்ட பிதாவும், மிகுந்த அழகுள்ளவளாய்த் தனக்கு வந்த மனைவியும் பெருமையான சாஸ்திரங்களை கற்றுக்கொள்ளாத பிள்ளையும் ஒருவனுக்குக் கிடைக்குமாகில் அவன் யாவருக்கும் பகையுடையவனென்றார் நன்றாய் அறிந்த கிரந்தகர்த்தர்கள். 78

நிலை தளர்ந்திட்டபோது நீணிலத்துறவுமில்லை ஜலமிருந்தகன்றபோது தாமரைக்கருக்கன்கூற்றம் பலவனமெரியும்போது பற்றுதீக்குறவாங்காற்று மெலிவது விளக்கேயாகில் மீண்டுமிக்காற்றே கூற்றாம்.

(இ-ள்.) நீர் நிறைந்த தடாகத்திலுள்ள தாமரைப் புஷ்பத்திற்கு அக்காலத்தில்சிநேகிதனாகயிருந்த சூரியனே நீர்வற்றியகாலத்தில் யமனாகும் அடர்ந்த பெருங்காடுகள் தீப்பற்றியெரியும்போது இப்பெருநெருப்புக்கு தன்னளவிற் சுருக்கியொரு தீபத்தள வாய் நின்றபோது அக்காற்றே அத்தீபத்திற்கு யமனாகும்; (அதுபோல) செல்வம் நிறைந்தகாலத்தில் நெருங்கிய உறவினராயிருந்தவர்களும் அது தவறியகாலத்தில் பந்துத்வ நீங்கிப் பகைவராவார்கள், 79

முடுத்தபாவாணர்தக் கோர்மறையவ ரிரப்போர்க் கொல்லாங், கொடுத்தயார் வறுமையுற்றார் கொடாது வாழ்ந்தவரார்மண்மேல், எடுத்தநாடுண்ட நீருமெடாத காட்டகத்து நீரு, மடுத்தகோடையிலேவற்றி யல்லதிற் பெருகுந்தானே.

(இ-ள்.) நெருங்கிய வித்வான்கள் மேலானவர்கள் வேதியர்கள் யாசிப்போர்கள் இவர்களுக்குக் கொடுத்ததினால் யார் தரித்திரத்தையடைந்தார்கள் கொடாமல் பூமியின்மேலிருந்து யார்வாழ்ந்தனர், நாட்டில்

யாவரும் எடுத்துண்ணத்தக்க தடாகஜலமும் ஒருவரும் எடுத்துண்ணாத நாட்டினிடத்திலுள்ள ஏரி நீரும், பொருந்திய கோடைகாலத்தில் வற்றியும் கார்காலத்தில் ஜலம் நிறைந்தும் பெருகுமல்லவா 80

வேறு.

இணங்கி யொருகால் முடமாகி யொருகண்ணின்றிச் செவியிழந்து. வணங்குநெடுவாலறுப்புண்டு மன்னுமுதுகில் வயிற்றோடொட்டி, அணங்குநலியும்பெய்தியகல்வாயோடுக்கழுத்தேந்தி,கணங்கன்மூவெல்பின் சென்றால் யாரைக்காமன்றுயர்செய்யான்

[இ-ள்] வாட்டமுற்றும் ஒருகால் முடமாகியும், ஒருகண் குருடடைந்தும்,காதறுப்புண்டும், நீண்டுவளையும் வால் அறுபட்டும், உணவின்றி வயிறுமுதுகோடொட்டியும், அழகுகெட்டுமுதுமைவாய்ந்தும் அகன்றவாயிலீயுடையகலவடையைகழுத்தில் மாட்டிக்கொண்டு திரியும் ஆண் நாயானது ஒரு பெண்ணுயின்பின் காமத்தாலோடித் திரியுமாகில் மற்ற எவர்களை மன்மதன் துன்பஞ்செய்யான் எ-று 81

எழுசீரடியாசிரிய விருத்தம்.

கன்மனப்பார்ப்பார் தங்களைப் படைத்துக்காகத்தை யென்செயப்படைத்தாய் துன்மதிவணிகர்தங்களைப்படைத்துச் சோரரை யென்செயப் படைத்தாய், வன்மனவடுகர் தங்களைப்படைத்துவானரமென்செயப்படைத்தாய், நன்மனைதோறும் பெண்களைப்படைத்து நமனை யென்செயப் படைத்தாய்

[இ-ள்]நான்முகனே! கருங்கல்லைபோன்ற நெஞ்சத்தையுடைய பிராமணரைப்படைத்தும், காகத்தையும் துற்புத்தியுள்ள வணிகர்களைப்படைத்திருந்தும் திருடர்களையும், வலிய நெஞ்சத்தையுடையவடுவரைப் படைத்திருந்தும் வானரங்களையும், நல்ல வீடுகள்தோறும் பெண்களைப்படைத்தும் எமனையும் யாதுகாரணத்திற்காகப் படைத்தாய் எ-று 82

கலிவிருத்தம்,

உண்ணல்பூச்சூடனெஞ்சுவத்தலொப்பனே
பண்ணலெல்லாமவர் பார்க்கவேயன்றோ
யண்ணல்தன்பிரிவினை யறிந்துதோழி நீ
மண்ணவந்தனையிது மடைமையாகுமால்

[இ-ள்] என்னுயிர்ப்பாங்கியே உலகத்தில் கற்பிற்சிறந்த பெண்கள், மதுரமான ஆகாரங்களையுட்கொள்ளுதலும் பரிமளமிகுந்த புட்பங்களை முடித்தலும், மனமகிழ்ச்சிமுகமலர்ச்சியோடிருத்தலும், மற்றும்பல விதமான திவ்விய வஸ்திராபரணங்களால் தன்னையலங்கரித்துக்கொள்ளுதலுமாகிய இதற்காகவேயல்லலவோ [அவ்வாறிக்க] பெருமையிற் சிறந்த எனது நாயகன் தற்சமயம் என்னைவிட்டுப்பிரிந்திருப்பது தெரிந்திருந்தும் என்னை யலங்காரஞ்செய்வற்காக நீ வந்தது உன்னறியாமையின்று லல்லவா எ-று 83

கோளறிறடர்ந்தகாட்டில் குறங்கில்வைத்த முதமுட்டி, தோளினிற்றூக்கிவைத்துச் சுமந்துபேருவளர்த்த, ஆளனைக்கிணற்றிற்றள்ளி யழகிலாமுடவனைச்சேர்ந்தாள், காளநேர்கண்ணினுரைக்கனவிலும் நம்பொணுதே.

[இ-ள்] வெவ்விய சிங்கங்கள் வாழுங்கானகத்தில் துடையிலிருத்தி யன்னமூட்டித் தோளிற்றூக்கிச் சுமந்து அன்பாக வளர்த்துவந்த புருடனையுங்கிணற்றிற்றள்ளி ஒரழகில்லாத முடவனை ஒருத்தி கூடினுள் ஆதலால் விஷத்துக்கொப்பான கண்ணுடையவரை கனவிலும் நம்பத்தகாது எ-று 84

கொச்சகக்கலிப்பா

சேய்கொண்டாருங் கமலச்செம்மலுடனேயரவப்பாய்கொண்டாரும் பணியும் பட்டீச்சுரத்தானே, நோய்கொண்டாலுங்கொளலாம் நூறுவயதளவும்பேய்கொண்டாலுங்கொளலாம் பெண்கொள்ளலாகாதே.

(இ-ள்) சிவந்த நிறத்தைக்கொண்டு விளங்குந் தாமரைமலரிலுள்ள பிரமதேவனும், ஆதிசேடனைப் பாயாகக்கொண்ட மகாவிஷ்ணுவும் வணங்கித்துதிக்கும்படியாகத் திருப்பட்டீச்சுரத்தில் எழுந்தருளியசிவ பெருமானே! [ஒருவன்] நாறுமயதளவும் வியாதியையுங்கொள்ளலாம் பேயையுங்கொள்ளலாம்பெண்ணைக் கொள்ளல் ஆகாது ஏ-று 85

கஸ்தூரி முதலிய வாசனைவஸ்துக்களை விற்பனை செய்பவர் ஒருவேடன் குடியிருப்பிற்சென்று தமது வர்த்தகத்தைக்காட்டிய போது நடந்த சம்பாஷணை

நாணமென்பது மணங்கமழ்பொருளது நாவிலுண்பதுவோசொல், ஊணங்குவேவான்மடைந்தைய ரணிவதாயுறர்மூலத் தலைக்கோட்டில், ஆனதங்கது பூசினால் வீங்கியதமையுமோவெனக்கேட்க, காணவேட்டுவச் சேரி விட்டகன்றனர் கடிகமழ்விலைவாணர்

(இ-ள்] வர்த்தகர் நாணமென்பது வாசனை கமழும் பொருளென்ன, வேடர் நாவினால் சுவைத்துச் சாப்பிடத்தக்க பதார்த்தமோ சொல்லென்ன, வர்த்தகர் ஊனுண்பவனே ஸ்திரீகள் விசாலித்த முலையினிடத்து அணிந்துகொள்ளும் வாசனைத்திரவியம் என்ன வேடர் அதைப்பூசில் முலைவீக்கம் அமுங்கிவிடுமோவென்ன வர்த்தகர் அக்கானகத்திலுள்ள வேடர் குடியிருப்பைவிட்டு நீங்கினர். 86

கலி நிலைத்துறை.

கொண்டுவிண்படரகருடன் வாய்க்கொடு வரிநாகம் விண்டநாகத்தின்வாயினில் வெகுண்டவன் தேரை மண்டுதேரையின்வாயினிலகப்படுவண்டு வண்டு தேனுகரின்பமே மானிடவின்பம்

[இ-ள்] கருடன் வாயினிடத்தகப்பட்டு ஆகாயத்திற்கொண்டுசெல்லும் நீண்டநாகமும், அந்நாகத்தின் வாயிலகப்பட்ட தேரையும்; அத்தேரையின் வாயி

லகப்பட்ட வண்டும் அத்தகைய வண்டானது மது வை புண்ணுமின்பத்திற்கொப்பேயாகும்; இவ்வுலகத் திலுள்ள மனிதர்களனுபவிக்கும் இன்பங்கள். 87

அறுசீரடியாசிரிய விருத்தம்

கற்பூரப்பாத்திகட்டி கஸ்தூரி யெருப்போட்டு
கமழ்நீர்ப்பாய்ச்சிப் பொற்பூரவுள்ளியினை விதைத்தா
லுந்தின்குணத்தைப்பொருந்தக்காட்டும்சொற்பேதை
யருக்கறிவிக்கினினி தாகவருமெனவே சொல்லினாலு
ம் தற்போதம்வாராதாங் கவர்குணமேலாகநடக்குந்
தானே.

[இ-ள்] கற்பூரத்தால் வரப்புகளிட்டுக் கஸ்தூரி யையே எருவாகத்தூவி வாசனை நீரையேபாய்ச்சி அழுகுண்டாக ஈருள்ளியை அதில் நட்டுவைத்தாலும் அதின்குணத்தையே செவ்வையாய்க் காண்பிக்கும் சொல்லத்தக்க அறிவில்லாதவர்களும் இனிமையான வறிவுவருமென்று எவ்வளவுசொன்னாலும் நல்லகுண மானது சற்றும் வாராது அப்போதுமவர்கள் தீயகு ணத்தையே மேலாகக் காட்டுவார் எ-று 88

கண்ணொப்புரைத்தல்.

கலிவிருத்தம்

தண்டுலாவிய தாமரைப் பொய்கையில்
மொண்டுநீரை முகத்தருகேந்தினாள்
கெண்டை கெண்டையென்றக்கரையேறினாள்
கெண்டை காண்கிலள் நின்று தயங்கினாள்.

[இ-ள்) கொடிகளமைந்த தாமரைத்தடாகத்திலு ள்ள தண்ணீரைக் கையால் முகந்து ஒருமங்கை தன் முகத்தினருகே யேந்திப்பார்த்தாள் [அதனுள்] தெரி ந்த கண் நிழலைப் பார்த்து கெண்டை கெண்டை யெ ன்று கூவிக்கொண்டே கரையிலேறிப்பார்த்தபொழுது அக்கெண்டைமீனைக் காணுமல் நின்று மயங்கினாள் 89

மருவு சந்தனக்குழம்புபல் சுவையுணு வளம்பெற வமைத்தாலும், சருவசந்தேகமனமுள மாதரைத் தழு வலுமாகாதே, பருவதங்கள்போற் பலபல நவமணிப் பைம்பொனை யீந்தாலும், கெருவமிஞ்சிய மானிடர் தோழமை கிட்டலுமாகாதே. 90

[இ-ள்] பொருந்திய சந்தனக்குழம்பு முதலிய வாசனைத் திரவியங்களையும் பலவித சுவையுணவுகளை யும் அழகுபெறச் சேகரித்துத் தந்தாலும் எதிலும் சந்தேகாஸ்பதமுண்டாக நடக்கு மாதர்களையணைதல் தகாது, மலையளவாகிய அநேக நவரத்தினங்கள் அழுத்திய பசிய பொன்னுபரணங்களைக் கொடுத்தா லும் கெருவம் மிகுதியுள்ள மனிதர்களின் சினேகம் இவ்வளவும் கொள்ளுதல் கூடாது. 90

தலைவி வனப்புரைத்தல்.

நிலத்தலை நீரின் மூழ்கி நின்றவடன்னைநேரே, குலத்தலை மஞ்ஞைகண்டு கூவெனக் காவிலேக, முலை த்தலையதனைக்கண்டு மும்மதக்கரிவந் தூற்ற, தனைத்த லைச் சிங்கமென்றக் களிறுகண் டேகிற்றம்மா.

[இ-ள்] பூமியினிடத்து ஜலத்தில் முழுகிநின்ற ஒரு மங்கையைக் கூட்டமாயிருந்த மயில்கள் நேரே பார்த்து அவள் சாயலுக்குப் பயந்து கூவென்றலறி ஓர் சோலையிற் புகுந்தன. அவள் ஸ்தனச் சிகரத்தைக் கண்டு மும்மதங்களைப் பொழியாநின்ற யானைகள் தங் களினமென் றோடிவந்து அவளிடையாகிய சிங்கத் தைக் கண்டு பயந்து ஓடிப்போயிற்று, எ-று. 91

அற்பசந்தோஷிகளின் இயல்பைப் பற்றிக் கூறியது.

கரியொரு திங்களாறு கானவன் மூன்றுநாளும், இரீதலைப் புற்றில்நாக மின்றுனுமிரையீதென்று, வீரி

தலை வேடன்கையில் விற்குதை நரம்பைக்கவ்வி, நரி யனுர் பட்டபாடு நாளையேபடுவர் மாதோ.

[இ-ள்] ஒரு வேடன் யானையின்மீது பாணம் பிர யோகம்பண்ணித் தானொரு நாகத்தாற் கடியுண்டு அந்நாகத்தின்மீதே விழுந்து யானையுந் தானும் நாக முமிறந்துகிடக்கக் கண்ட (ஒரு நரி) யானையோ ஆறு மாதத்துணவாகும், வேடனே மூன்றுநாட் பொழுது போகும், புற்று நாகமோ இன்றுண்ணும் இரையா கும் என்று சந்தோஷித்துக்கொண்டே விரிந்த தலை யையுடைய வேடனது கையிலுள்ள வில்லின் குதை நரம்பைக் கடித்தமாத்திரத்தில் அது அறுந்து அத ஞல் அந்நரி இறந்தது. அதுபோலவே அற்ப சந் தோஷிகள் வீணைசைகொண்டு துன்பப்படுவார்கள், எ-று. 92

பூதலத்தில் மானிடராய்ப் பிறப்பதரிதெனப் புகல் வார் பிறந்தோர் தாமும், ஆதிமறைநூலின் முறைய ருள்கீர்த்தி யாத்திரைகள் பாய்ச் சென்று, நீதிவழு வாதவகை வழக்குரைத்து நல்லோரைநேசங்கொண்டு, காதவழி பேரில்லார் கழுதையெனப் பாரிலுள்ளோர் கருதுவாரே.

[இ-ள்] உலகத்தில் மானிடராய்ப் பிறப்பதரிதெ னச் சொல்வார்கள், அப்படிப் பிறந்தாலும் முதன் மையான வேதசாஸ்திரங்களின் முறைப்படி கிருபை புகழ்ச்சி இவற்றையுடையவராய் ஸ்தலயாத்திரை செய்து நியாயத் தவருதபடி வழக்குகள் தீர்த்து பெரி யோர்களுக்கு வழிபாடுசெய்து நல்லவர்களென்று காத வழி தூரமேனும் பேர்பெற்றிராதவர்களைக் கழுதைப் பிறப்பென்றே யாவருமிகழ்வார்கள். 93

ஆரம்பூண்ட மணிமார்பா வயோதிக்கரசே யண் ணுகேள், ஈரமிருக்க மரமிருக்க இலைகளுதிர்ந்த வா

றேது, வாரங்கொண்டு வழக்குரைத்து மண்மேனி ன்று வலிபேசி, ஓரஞ்சொன்ன குடியதுபோ லுதிர்ந்து கிடக்குந் தம்பியரே.

[இ-ள்] மாலையணிந்த அழகிய மார்பையுடைய அயோத்தியாபுரியையாளும் மகாராஜனுகிய அண்ணுவே கேட்பாயாக, ஈரமிருக்க அதின் இலைகள் மட்டும் உதிர்ந்துபோன காரணம் யாதென்று தம்பியானவன் கேட்க அதற்கு அவன் பூமிமேலிருந்து பட்சபாதமாய்த் தனது வல்லமையினுல் வழக்குத் தீர்த்து ஓர வஞ்சனை செய்பவர் குடிபோல் உதிர்ந்துகிடக்கின்றது தம்பி என்றுரைத்தான், எ-று. 94

அறுசீரடி யாசிரிய விருத்தம்.

வல்லியந் தனைக்கண்டஞ்சி மரந்தனிலேறும் வேடன், கொல்லிய பசியைத் தீர்த்து ரட்சித்த குரங்கைக் கொன்ருன், நல்லவன்றனக்குச் செய்த நலமது மிக்கதாகும், புல்லர்கட்கெய்ச் செய்தா லுயிர்தனைப் போக்குவாரே.

[இ-ள்] புலியைக் கண்டு பயந்து ஓர் விருக்ஷத்திலேறியிருந்த வேடனுக்கு உயிர் நீங்கத்தக்க மிகுந்த பசியைத் தீர்த்து ரட்சித்த குரங்கை அவ்வேடனே கொன்ருன். (ஆதலால்) நல்லோருக்குச் செய்தவுதவி மிகுதியான நன்மையையே தரும். அற்பர்சளுக்குச் செய்த உதவி செய்தவனுக்கே மிகுந்த அபாயம் உண்டாகும். இக்கதை கபோத வாக்கியத்திலுள்ளது, எ-று. 95

தன்மானுங் குலமானந் தன்னையுந் தடைந்தவுயிர் தங்கண்மானம், என்மான மாகிலென்ன வெல்லவரும் சரியெனவே யெண்ணம் போந்து நன்மானம் வைத்தெந்த நாளுமவர் தங்களுக்கு நன்மைசெய்வோர்,

மன்மானியடைந்தோரைக் காக்கின்ற வள்ளலென வழுத்தலாமே.

[இ-ள்] தான்பிறந்த ஜாதியபிமானம், தன்னிடம் வந்து அடைந்தவர்களுடைய உயிர்போன்ற மானம் முதலியவைகளையும் தன்னுடைய மனத்துக்குச் சமானமாகக் கருதி நல்லபிமானம் வைத்து எந்தக் காலத்திலும் நன்மை செய்யத்தக்கவர்கள் யாரோ அவர்களையே பொருந்தியமானாபிமானமுள்ளவர்களென்றும், அபயமென்றடைந்தவர்களை இரட்சிக்கத்தக்க வள்ளல்களென்றும் சொல்லுவார்கள், எ-று. 96

தன்னைத்தான் புகழ்வோருந் தன்குலமே பெரிதெனவே தான் சொல்வோரும், பொன்னைத்தான்றேடியறம் புரியாம லவைகாத்துப் பொன்றினோரும், மின்னைப்போன் மனையாளை வீட்டில்வைத்து வேசைசுகம் விரும்புவோரும், அன்னைபிதா பாவலரைப் பகைப்போருமறிவிலாக் கசடராமே.

[இ-ள்] தன்னையே புகழ்கின்றவர்களும், தன் ஜாதியையே பெரிதென்றுரைப்பவர்களும், பொருளைத் தேடி தருமஞ்செய்யாமல் புதைத்துவைத் திறப்பவர்களும், மின்னைப்போலும் தேககாந்தியையுடைய மனைவியை வீட்டில் வைத்துப் பரத்தையர் போகத்தை இச்சிக்கின்றவர்களும், தாய்தந்தை வித்வான்கள் முதலியோரை விரோதித்துக் கொள்பவர்களுமாகிய இவர்கள் புத்தியில்லாத சிறுக்களாவார்கள், எ-று. 97

பெண்கள்சொற் கேட்கின்ற பேயரெனுங் குணமூடப் பேடி லோபர், முண்டைகளுக்கிணையில்லா முனைவீரர் புருடரென மொழியொணாதே, உண்டுலகமுதிர்ப்பாருள் கீர்த்தியற மின்னதெனு முணர்வேயில்லார், அண்டினவர் தமைக்கெடுப்பா ரழிவழக்கே சொல்வதவரறிவு தானே.

[இ-ள்] மங்கையர் சொற்களைக் கேட்கின்ற பேயர்களாகிய குணங்கெட்ட பேடியனைய உலோபிகளும், விதவைகளும் ஒப்புரைக்கக் கூடாத சுத்தவீரர்களுமாகிய இவர்களையும், ஆண்டன்மையுடையவரெனச் சொல்லக்கூடாது. உலகத்தில் பிறந்தவர்களில் புகழும் கருமமும் இன்னதென்று ஆராய்ந்து அறியாதவர்களே அடுத்தவர்களைக் கெடுப்பவராவர். நியாயத்தை விட்டு நியாயவிரோதமாகப் பேசுவதே அவர்கள் புத்தியாகும், எ-று.

பொல்லார்க்குக் கல்விவரில் கெர்வமுண்டா மதனோடு பொருளுஞ்சேர்ந்தால், சொல்லாதுஞ் சொல்லுவிக்குஞ் சொற்சென்றால் குடிகெடுக்கத் துணிவர் கண்டாய், நல்லோர்க்கிம்மூன்றுகுண முண்டாகி லருளதிக ஞானமுண்டாம், எல்லோர்க்கு முபகார ராயிருந்து பரகதியை யெய்து வாரே.

[இ-ள்] துற்குணமுடையவர்களுக்குக் கல்வியுண்டாகில் கெருவமதிகப்படும், அக்கல்வியோடு செல்வமுங் கூடினால் சொல்லத் தகாத வார்த்தைகளையுஞ் சொல்லும்படிசெய்யும், தன் சொல் எங்குஞ் சொல்லத் தகுந்ததா யிருந்தால் குடிகளைக் கெடுக்கவுந் துணிவார்கள், நற்குணமுடையார்க்குக் கல்வி, செல்வம் சொற்செல்லுதல் ஆகிய இந்த மூன்றுண்டாகில் அருளும் ஞானமும் பெற்று யாவருக்கும் உபகாரிகளாயிருந்து முத்தியடைவார்கள், எ-று.

### தலைவி நலங்கூறுதல்.

உந்தியின் சுழியின் கீழ்ச்சே ருரோமமாங்கரிய நாகஞ், சந்திர னெனவே யெண்ணித் தையலாள் முகத்தைநோக்க மந்திரகிரிகள் விம்மி வழிமறித் திடுதல் கண்டு, சிந்துரக் கயற்கணோடிச் செவிதனக் குரைத்ததம்மா.

[இ-ள்] உந்திச் சுழியாகிய நாபிக்கடுத்துள்ள உரோமமாகிய கரியநாகமானது (எனது தலைவியின்) வதனத்தைச் சந்திரனென்று கருதி மேல்நோக்க, ஸ்தனங்களாகிய மத்திரமலைகணெருங்கி வழியைத் தடுத்துக்கொள்ளுதலைப் பார்த்து செவ்வரிபரந்த கயலைப் போலுங் கண்கள் ஓடி செவிகளுக்குச் சொல்லியது, எ-று. 60.

இதுவுமது.

மாகமா மேடைமீதில் மங்கைநின் றுலாவக் கண்டு, ஏகமா மதியென் றெண்ணி யிராகுவந்துற்றபோது, பாகுசேர் மொழியினாளும் பதறியே பாதம்வாங்கத் தோகைமா மயிலென்றெண்ணித் தொடர்ந்தரா மீண்டதன்றே.

[இ-ள்] வானமளாவிய மேடைமீதில் (எனது தலைவியான) மங்கைப்பருவமுடையவள் நின்று உலாவுகையில் ஒப்பற்ற பூரணச் சந்திரனென்று நினைத்து (நவக்கிரகத்திலொன்றாகிய) இராகுவென்னும் கரும்பாம்பானது வந்துநெருங்கப் பால்போலும் மொழியையுடையாள் மனம் பதறித் தனது பாதங்கள் வருந்த நடக்கையில் (அவள் சாயலைக்கண்டு) திரும்பிவிட்டது, எ-று. 61

சலதாரை வீழ்நீருஞ் சாகரந் தன்னைச்சார்ந்தாற் குலமென்றே கொள்வதல்லாற் குரைகடல் வெறுப்பதுண்டோ, புலவர்கள் சபையிற்கூடிப் புன்கவியாளர் சார்ந்தால் நலமென்றே கொள்வதல்லா நவில்வரோ பெரியோர் குற்றம்.

[இ-ள்] சலதாரையில் ஒழுகும் நாற்றமுள்ள தண்ணீரும் சமுத்திரத்திற் புகுந்தால் தன்னினமென்று ஏற்றுக்கொள்ளுமல்லாமல் வெறுத்துத் தள்ளுவதுண்டோ இல்லை. (அதுபோல) பெரிய வித்வான்கள்

சபையில் நிரம்பிய நூற்கேள்வியில்லாத அற்ப கவி ஞர்கள் வந்து சேர்ந்தாலும் கற்றவர்களென்று ஏற்றுக் கொள்ளுவரல்லாற் குற்றஞ்சொல்லார்கள், எ-று. 102

காரெனுங் குழல்கட்டப்பிக் கடுஞ்சிலை வெளிதப்பி, மேரென வளர்ந்து நின்ற வேழத்தின்கோடு தப்பித் தாருறு கரியரோமச் சங்கிலிவழியேசென்று, சீரிய னென வளர்ந்த செல்வனல் குலிற்கை வைத்தான்.

[இ-ள்] கூந்தலாகிய மேகத்துக்கும், புருவமாகிய வில்லம்புகளுக்கும், மகாமேருபோன்ற ஸ்தனங்களா கிய யானைத் தந்தங்களுக்குந் தவறி உரோமமாகிய சங்கிலியிவ் வழியேசென்று மேன்மையாய் வளர்ந்த செல்வத்தையுடைய எனது நாயகனுனவன் அல்குலா கிய பாம்பின்படத்திற் கரங்களைச் செலுத்தினன், எ-று. 103

உண்டதை யொழிக்கும்வாச லோர நீரொழித்தூ மேலே, வண்டலு மழுக்குஞ்சேறு முதாமு மாறுவா சல், உண்டத னிருப்பைக்கண்டு பெருக்களியுள்ளங் கொண்டு, கண்டன ரிளைஞரெல்லாங் கதியெனக் கரு துவாரே.

[இ-ள்] உண்ட உணவுகளை ஜீரணிக்கச்செய்து வெளியிற்றள்ளும் குதவாயலையறித்து உவர் நீரொழு கச் சேரனைய வழுக்குறத் திரண்ட ரத்தம் மாறாத வாசல் ஒன்றுண்டு. அதனிருப்பைப் பார்த்து பெருத்த சந்தோஷத்தை மனதிற்கொண்டு வாலிபர் இதுவே மோட்சமென்று கருதுகின்றார்கள், எ-று. 104

கரந்தொருவன் கணைதொடுக்க மேற்பறக்கும் ராசாளி கருத்துங்கண்டே, உரந்துசிறு கானகத்தி லுயிர்ப்புறு பேடுதனக் குரைக்குங்காலை, விரைந்து விடந்தீண்டவுயிர் விடும்வேடன் கணையால்வல் லூறும் வீழ்ந்த, தரன்செயலேயாவதல்லாற் றன்செயலா லாவ துண்டோ வறிவுள் ளோரே.

[இ-ள்] ஒரு காட்டில் ஒளித்திருந்து வலியகணை தொடுக்கும் வேடனைக் கண்டு பயந்து பறந்த புருக்கள் இரண்டில் ஆண்புருவானது பெண்புருவைப்பார்த்து நம்மைப் பட்சிக்கக் கருதி பூமியில் வேடனிருக்கின்ருன்: ஆகாயத்தில் இராஜாளிப்பட்சி பறக்கின்றது, யாதுசெய்வோமென்று விசனப்பட, அந்தச் சமயத்தில் வேடனைப் புதரிலிருந்த பாம்பு கடித்து அதனல் அவனிறக்க, அவன் கை வில்லிலிருந்த அம்பு விடுபட்டு மேற்பறந்த ராஜாளியைக் கொன்று வீழ்த்தியதென்ருல் எல்லாம் கடவுள் செயலாவதல்லாமல் தன் செயலாலொன்றுமாவதில்லை, எ-று. 105

கொல்லுலை வேற்கயற்கண் கொவ்வையங்கனி வாய் மாதே, நல்லணி மெய்யிற்பூண்டு நாசிகா பரண மீதிற், சொல்லரிற் குன்றி தேடிச் சூடிய தென்னே வென்ருன், மெல்லியல்கண் ணும் வாயும் புதைத்தனள் வெண்முத்தென்ருள்.

[இ-ள்] கொல்லனுலையிற் காய்ச்சிக் கூர்மைசெய்த வேலாயுதத்தையும் கெண்டை மீனையுமொத்த கண்களும், கொவ்வைப்பழம்போன்ற சிவந்த வாயினையுமுள்ள பெண்ணே! நல்ல ஆபரணங்களைத் தேகத்திலணிந்து, நாசியாபரணத்தில் குற்றம்பொருந்திய குன்றிமணியைப் புனைந்தது யாது காரணமென்ன? அப்பெண்ணனவள் வெட்கித் தனது கண்ணையும் செவ்வாயையும் மூடிக்கொண்டு வெள்ளை முத்தென்று சொன்னுள், எறு. 106

தலைவன் கூற்று.

கலிநிலைத்துறை.

அருகிலிவளருகிலிவ ளருகில்வரவுருகுங்
கரியகுழன்மேனியிவள் கானமயில்சாயல்
பெரியதனமிடைசிறிது பேதையிவளையோ
தெருவிலிவணின்றநிலை தெய்வமெனலாமே.

[இ-ள்] கறுப்புநிறம் பொருந்திய கூந்தலை யும், அழகிய மேனியையும், கானமயிலைப் போலுஞ் சாயலையும் பாரித்த ஸ்தனங்களையும், சிறுத்தவிடையி னையுமுடைய பெண்ணானவள் பக்கத்தில்வர மனமான துருகும். ஐயோ! வீதியில் இவள் நிற்கும் நிலையை நோக்கில் தெய்வப் பெண்ணென்றே மயங்கிச் சொல் லுதல் வேண்டும், எ-று. 107

பாங்கிக் கூற்று.

அலகுவாள்விழி யாயிழைநன் னுதற்
றிலகங்கண்டெதிர் செஞ்சிலைமார னுங்
கலகமேசெயுங் கண்ணிதுவாமென
மலரம்பைந்தையும் வைத்துவணங்கினன்.

[இ-ள்] வாளாயுதத்தை யொத்த கண்ணுடைய எங்கள் கன்னியினது நல்ல நெற்றியிலுள்ள பொட்டி னழகை செவ்விய வில்லையுடைய மன்மதன் கண்டு கலகம் விளைக்கும் கண்ணேயென்று நினைத்துத் தன் மலரம்புகளைந்தையும் அவள் முன்வைத்து வணங்கி னன். 108

குரங்கு நின்று கூத்தாடிய கோலத்தைக் கண்டே, அரங்கு முன்புநாய் பாடிக் கொண்டாடிய வதுபோல், கரங்கணீட்டியே பேசிய கசடரைக் கண்டு, சிரங்களா ட்டியே மெச்சிடுமறிவிலார் செய்கை.

[இ-ள்] குரங்கு கூத்தாடிநின்ற அழகைப் பார் த்து ஒருநாய் தானும் அவ்வாறூடக்கருதி ஊளைப் பாட்டான் வீதியில் ஆடியதுபோல் கைகளை நீட்டிப் பேசும் மூடர்களைக் கண்டுமெச்சித் தலைகளையாட்டித் தங்களைத் தாங்களே மெச்சிக்கொள்வது அறிவில் லார்கள் தொழில். 109

அறுசீரடியாசிரிய விருத்தம்.

வில்லது வளைந்ததென்றும் வேழம துறங்கிற்றென்றும், வல்லியம் பதுங்கிற்றென்றும், வளர்கடா பிந்திற்றென்றும், புல்லர்தஞ் சொல்லுக்கஞ்சிப் பொறுத்தனர் பெரியோரென்றும், நல்லதென் றிருக்கவேண்டாம் நஞ்செனக் கருதலாமே.

[இ-ள்] வில் வளைந்து கொடுத்தல், யானை நித்திரைசெய்தல், புலிபதுங்குதல், கிடாய் பின்வாங்குதல், கீழ்மக்கள் சொல்லுக்குப் பயந்து பெரியோர் பெருமையோடிருத்தல், இவைகள் யாவையும் நன்மையென்று நினைக்கக் கூடாது. விஷமென்றே சிந்திக்கவேண்டும்.

சலந்தனிற் கிடக்குமாமை சலத்தை விட்டகன்றபோது, கொலைபுரி வேடன்கண்டு கூரையிற் கொண்டுசெல்ல, வலுவினா லவனைவெல்ல வகையொன்று மில்லையென்றே, கலையெலி காகஞ் செய்த கதையென விளம்புவோமே.

[இ-ள்] தண்ணீரிலிருந்த ஓராமை கரையில்வந்தபொழுது அதைக் கொல்லுந் தொழிலையுடைய ஒரு வேடன் பார்த்தப்பிடித்து வலையிலிட்டுக் கொண்டுபோக அந்த ஆமைக்குப் பிராண சிநேகிதமாயிருந்த மானும் எலியும் காகமும் தங்கள் வல்லமையினால் அவ்வேடனை ஜெயிக்க யாதொருவகையினு முடியாதென்று நினைத்து தந்திரத்தால் ஆமையைத் தப்புவித்த கதைபோலாகும் நீ செய்த காரியம்.

நிலத்திற் குணவான் றோன்றி னீள்குடித்தனரும் வாழ்வார், தலமெலாம் வாசந் தோன்றும் சந்தன மரத்திற் கொப்பம், நலமிலாக் கயவன் றோன்றி னன்குடித் தேசம் பாழாங், குலமெலாம் பழுதுசெய்யுங் கோடரிக் காம்புநேராம்.

[இ-ள்] உலகத்தில் நல்ல குணமுடையவனாய் ஒருவன் பிறந்தால் அவனால் அவன் குலமுழுவதுவும் வாழ்வையடையும். சந்தன விருக்ஷம்போல எத்திசையிலும் புகழ் மணக்கும். நன்மையில்லாத கீழ்மகனாய் உதித்தால் அவன் குலமும் தேசமும் பாழடையும். கோடரிக்காம்புபோல் தன் ஜாதிக்கும் ஈனங்களுண்டாக்குவான், எ-று.

### விபசாரத்தைக் கைக்கொண்ட புருடபாரியர்களுக்குள் நடந்த சம்பாஷணையை தலைவி தோழிக்குக் கூறியது.

எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

உயிரனையா னுடன்கலந்த வுளவறிந்தீண்டெனை
மணந்தோ னுடன்றிச் செய்கை, செயலெனையென்
றிலைமறைகா யெனத்தணவா தவ்விரு வகையுந்
தீதென், றயில்விழியாய் மயற்பொதுவூழ் வலித்திடும்
பெண்மதியே னதுவுமுழின், இயலெனவள் ளுவரு
ரைத்தார் சான்று நீ யெனப்புகன்றே னின்புற்றனே.

[இ-ள்] வேல்போலுங் கூரிய கண்களையுடைய தோழியே! எனதுயிரினுஞ் சிறந்த சோரநாயகனிடத்தில் நான் கூடிக் குலாவிவரும் மர்மத்தை எனது சொந்த நாயகனறிந்து இலைமறைவு காய்மறைவென்றில்லாமல் என்மேற் கோபங்கொண்டு இப்படிப்பட்ட தகாதகாரியம் செய்யத் துணிந்தமைக்குக் காரணம் யாதென்று கேட்க, அப்போது நான் உண்டென்பதும் இல்லையென்பதுமாகிய இரண்டு காரியங்களும் குற்றமாகவே முடியுமென்று எனக்குள் யோசித்து காமம் பொதுவென்று தலையிலெழுதிய வெழுத்துத் தவறாதென்றும் சொன்னேன். அவர் முன்னிலுமதிக கோபங்கொண்டு விதியை மதியால் வெல்லக்கூடாதா வென்ன, அதற்கு ஐயோ என் புத்தி பெண்புத்தியல்

லவா ஆண்மக்களுக்குள் சிறந்த புத்தியும் ஊழின்படி யே நடக்குமென்று பெரியோர் கட்டளையிட்டிருக்கின் றார்களே மேலும் இதற்கு சாட்சி தாஙகளே பிரத்தி யட்சமாகவிருக்க வேறு தேடுவானேன் என்றேன். அதைக் கேட்டு மனமகிழ்ந்தனர் இதை நீ அறிவா யாக, எ-று. 113

நட்பிடைக் குய்யம் வைத்தார் பிறர்மனை நலத் தைச் செய்தார், கட்புடை காமத் தீயார் கன்னியை விலக்கி னோரும், அட்டடை னஞ்சுகின்றோ ராயுளுங் கொண்டு நின்று, குட்டநோய் நரகில்வீழ்ந்து குளிப்ப வரிவர்கள் கண்டாய்.

[இ-ள்] சிநேகத்தில் வஞ்சகம் செய்தவரும், அயலான்மனைவி இன்பத்தை இச்சித்தவரும், காமக் கினியால் வருந்துகின்ற கன்னியை அவளிஷ்டந் தணியக் கலவாதவரும், கொல்லுந்தொழிலை மேற் கொண்ட போர்க்களத்தில் பயந்தோடுபவரும் (ஆகிய இவர்கள்) குஷ்ட வியாதியையடைந்து நெடுநாள் உலகத்தில் துன்பத்தை யனுபவித்துப் பின்பு நரகத் தில் விழுவார்கள், எ-று, 114

மதியிலா மறையோன் மன்னன் மடந்தையை வேட்கையாலே, ருதுவது காலந்தன்னிற் றோஷ மென் றுரைத்தேயாற்றில், புதுமையா யெடுத்தபோது பெட்டியிற் புலி வாயாலே, அதிருடன் கடியுண்டன் றே யருநரகடைந் தான் மாதோ.

[இ-ள்] விவேகமற்ற ஓர் பிராமணன் தனனிடத் தில் கல்வி பயின்றுவந்த இராஜகுமாரத்தியின்மீது விடாமோகங்கொண்டு அவள் புஷ்பவதியானகாலம் மிகவுந் தோஷமுடையதென்று உடனே அவளை பேழையி லடக்கம்செய்து நதி முதலிய நீரோட்டங் களில் விட்டுவிட வேண்டுமென்று அவள் தந்தையா

கிய அரசனுக்குத் தெரிவித்து அவ்வாறே செய்வித்து பின்புதான் அப்பெட்டியைத் தேடிக்கொண்டு ஆற்றேரமாகச் சென்று ஓரிடத்திலப் பெட்டியைக் கண்டு அதை எடுத்து ஆசையுடனே திறக்க முன்னமே வேட்டையாடிவந்த வேறொரு அரசன் அப்பெட்டியை பார்த்தெடுத்து திறந்து அதற்குள்ளிருந்த கன்னிகையை அழைத்துக்கொண்டு வேட்டையில் அகப்பட்ட புலியை அதிற்போட்டுப் பூட்டி பழையபடி விட்டுவிட்டான். ஆதலால் அப்பெட்டிக்குள் இருந்த புலி அப்பிராமணனை அடித்துக்கொல்ல அதனுலிறந்து நரகத்தையடைந்தான், எ-று 115

மையது வல்லியம்வாழ் மலைக்குகை தனிற்புகுந்தே, ஐயமும் புலிக்குக் காட்டி யடவியிற் றிரத்துங் காலை, பையவே நரிக் கோளாலே படுபொருளுணரப் பட்ட, வெய்யவம் மிருகந்தானே கொன்றிட வீழ்ந்த தன்றே.

[இ-ள்] ஓர் ஆட்டுக்கிடாவானது புலியிருக்கும் படியான ஒருகுகைக்குட்புகுந்து அப்புலியை ஒருவிதமாய் மிரட்டுகிற காலத்தில் எதிரில்வந்த ஒரு நரியின் கோளாலே அப்புலியானது உண்மையைத் தெரிந்து கொண்டு அவ்வாட்டின்மேல் பாய்ந்து கொல்ல ஆட்டுக்கிடா யிறந்தது, எ-று. 116

மங்கை கைகை சொற்கேட்டு மன்னர்புகழ் தசரதனு மரணமானுன், செங்கமலச் சீதை சொல்லை சீராமன் கேட்டவுடன் சென்றுன் மான்பின், தங்கையவள் சொற்கேட்ட ராவணனுங் கிளையோடு தானுமாண்டான், நங்கையர்சொற் கேட்பதெல்லாம் கேடுவரும் பேருலகோர் நகைப்பர் தாமே.

[இ-ள்] அரசர் புகழும் தசரதன் கைகேசியென்னும் மனைவிசொற்கேட்டு மரணமடைந்தான் ஸ்ரீராம

பிரான் ஜானகிசொற்கேட்டு மான்பின்சென்று வருந்திஞன். இராவணன் தன் தங்கையாகிய சூர்ப்பனகையின் சொற்கேட்டு தன் சுற்றத்தோடு மாண்டான். ஆதலால் ஸ்திரீகள் சொற் கேட்பதெல்லாம் துன்பத்திற்கேயிடமாகும். உலகத்தவரும் நகைப்பார்கள். 117

ஆதியா மிருவர் நட்புக் கவமதிப் புறவவர்க்குள்,
சூதினுல் கபடஞ் செய்து துணைபிரிந்திடுவ ரென்ருல்
வேதியன் பவன வாயில் வேசைதாய் பச்சை நாவி,
யூதிய கதைபோலாகி யுறுநர கெய்துவாரே.

[இ-ள்] முதலில் ஒற்றுமையான சிநேகிதத்தைக் கொண்டிருந்த இருவருள் ஒருவரை மற்ருெருவர் அவமதிக்க வேண்டுமென்றெண்ணி அதற்குரிய வஞ்சகங்கள் பலவாய்ச் செய்து அதனுல் பகை நேர்ந்து ஒருவரைவிட்டொருவர் ஒரு தாசியானவள் தன் மகளோடு இணைபிரியாது கூடிக்குலாவிவந்த ஒரு பிராமணனுடைய குய்யத்தில் பச்சை நாவியை வைத்தூதிய கதையை யொப்பாரும், எ-று. இக்கதை சிந்தாமணியிலுள்ளது. 118

அருமையும் பெருமைதானு மறிந்துடன்படுவர்
தம்மால், இருமையு மொருமை யாகுமின்புறற் கேது
வுண்டாம், பரிவிலாச் சகுனிபோலப் பண்புகெட் டவ
ர்க டம்மால் ஒருமையி னிரயமெய்து மேதுவேயுரு
முன்ருே.

[இ-ள்] ஒருவருடைய அருமை, பெருமைகளையறிந்து உடன்பாடான சிநேகஞ் செய்வார்களாகில் இம்மை மறுமை இருமையினும் ஒரேவிதமான இன்பத்தையடைவதற்கேதுவுண்டாகும். சகுனியைப்போல் அன்பில்லாமல் துற்குணங்கொண்டவர்களின் சிநேகத்தால் மென்மேலும்பாவங்களே அதிகப்பட்டு நரகயேதுவே உண்டாகும், எ-று. 119

ஒருவனே யிரண்டு யாக்கை யூன்பொதியான நாற்
றம், உருவமும் புகழுமாகு மதற்குள் நீ யின்பமுற்று
மருவிய யாக்கை யிங்கே மாய்ந்திடு மற்றியாக்கை,
திறமதா யுலக மேத்தச் சிறந்துபின் னிற்குமன்றே.

[இ-ள்] உலகத்தில் மனிதர்களுக்கு பொய்யுடம்பென்றும், புகழுடம்பென்றும் இரண்டு உடம்புகளுண்டு. அவற்றுள் இவ்வுலக வின்பங்களை நுகர்வதற்கேதுவாகிய நாற்றம் பொருந்திய மாமிசபிண்டமாகிய பொய்யுடம்பு இவ்வுலகத்திலேயே நினைவின்றி மாய்ந்துவிடும். புகழுடம்போவெனில், இம்மை மறுமைக்கேதுவாய் என்று மழியாமல் உலகமெங்கும் சிறந்த கீர்த்தியோடு நிலைநிற்கும், எ-று.

கலி விருத்தம்.

வேலியானது பயிர்தனை மேய்ந்திட விதித்தாற்,
காலனனவ னுயிர்தனைக் கவர்ந்திட நினைந்தால், ஆல
மன்னையர் பாலகர்க் கருத்துவரானால், மேலிதோர்ந்து
டன் யார்கொலோ விலக்குவர் வேந்தே.

[இ-ள்.] ஓ அரசனே! காவலாக எற்பட்ட வேலியே பயிரை யுண்ணவும், எமன் உயிர்களைக் கவரவும் கொல்லத்தக்க விஷத்தை தாய்மார்களே பிள்ளைகளுக்கு ஊட்டவும் நினைப்பார்களாகில் இதையறிந்து தடுப்பவர் யார்.

அறுசீரடியாசிரிய விருத்தம்.

அறங்கெடு நீதியுங் குன்று மாவியு மாயுங்கா[illegible]
நிறங்கெடு மதியும்போகி நீண்டதோர் நரகிர் சேர்க்கு,
மறங்கெடு மறையோர் மன்னன் வணிகர்நல் லுழ
வோ ரென்றும், குலங்கெடு வேசைமாதர் குணங்களை
விரும்பினோர்க்கே.

[இ-ள்] சாந்த குணத்தையுடைய வேதியர், அரசர், வைசியர், உழவினர் என்னும் ஜாதிகளினுயர்வைக் கெடுக்கத்தக்க பரத்தையரை இச்சித்தவர்களுக்குத் தருமங்கெடும், செல்வங் குறையும், உயிரழியும், தேககாந்திமாறும். புத்தியுங்கெட்டு நீண்ட நரகத்தை அடைவார்கள். 122

இரண்டு சகோதரிகள் தங்களிடம் வந்த
இரண்டு தலைவர்களைப் பற்றி கூறியது.

கட்டளைக் கலித்துறை.

அரவிந்த நண்பன் சுதன்றம்பி மைத்துனன்
அண்ணன்கையில் வரமுந்தி யாயுதம் பூண்டவன்
காணுமற் றங்கவனே, பரமன்றிகிரியை யேந்தியமைந்
தன் பகைவன்வெற்பை, புரமென் றெடுத்தவன் மாற்
ருன்றன் சேவகனெண்டொடியே.

[இ-ள்] தங்காய்! என் வீட்டிற்கு வந்தவன் தாமரைக்குச் சிநேகிதனாகிய சூரியன் அவன் புத்திரன் கர்ணன், அவன் தம்பி அர்ச்சுனன், அவ்வர்ச்சுனன் மைத்துனன் கிருஷ்ணன், அக்கிருஷ்ணன் தமையன் பலராமன், அப்பலராமன் கையிலுள்ள ஆயுதம் கலப்பையைப் பூண்டிருப்பவனாகிய எருமைக்கடா என்றறிவாயாகவென்று உன்வீட்டிற்கு வந்தவன் யாரென்று கேட்க: தமக்காய்! சிவபெருமான் வசிக்கும் கயிலைமலையை யெடுத்த இராவணன், அவ்விராவணனுக்குப் பகைவனாகிய ஸ்ரீராமபிரானுக்கு தாசத்துவம் பூண்ட அவ்விராவணனோடு பகைத்து எதிர்த்தவனும், பர்வதங்களையெல்லாம்இலேசாகப்பேர்த்தெடுத்தவனுமான ஆஞ்சநேயன் எனவே குரங்கென்றறிவாயாக, எ-று. 123

## இரண்டு நண்பர்கள் தாங்கள் கலவிசெய்த மங்கையர்க ளியல்பைக் கூறியது.

சங்கரன் றேவி தமையன் மனைவி தனக்கு முன்
னும், மங்கையரேறிய வாகனங்காங் காணுமற் நங்க
வளோ, கொங்கைக ளீரைந் துடையவளாயிக் குவல
யத்தில், எங்குந் திரியும் வயிரவமூர்த்தியென் றேனி
னையே.

[இ-ள்] ஒருவன் மற்றொருவனைப் பார்த்து நண்
பனே! நீ கலந்த மங்கை எத்தன்மையாளென: சிவபெ
ருமானுக்கு நாயகியாகிய பார்வதி, அப்பார்வதியின்
தமையன் விஷ்ணு, அவ்விஷ்ணுவின் மனைவி இலக்
குமி, அவ்விலக்குமிக்கு முன் பிறந்தவள் மூதேவி
அம்மூதேவியானவளேறிய வாகனமாகுமென கழுதை
யென்று கூறி அதைக் கேட்ட மற்றவன் நான் கலந்த
மங்கையோவெனில் வயிரக்கடவுளின் வாகனமாயும்
பத்து முலைகளையுடையவளாயும் ஊரெங்கும் திரிகிற
நாயென் றறிவாயாக, எ-று. 124

இந்திரன் பதங்கள் குன்று மறையவர் பதங்கண்
மாறு, மந்திர நிலைகள்பெற மறுகயல் வறுமையாகும்,
சந்திரன் கதிரோன் சாயுந் தரணியிற் றேயமாளும்,
அந்தணர் கருமங்குன்றில் யாவரே வாழ்வார் மண்
ணில்.

[இ-ள்]வேதியர்கள் தாங்கள்செய்யத்தக்க கிரியைகளை
செய்யாதொழிந்தால் இந்திரனது செல்வங்கள் குறை
யும், இராசாக்கள் வாழ்க்கையுமாறும், மந்திரமலைகளி
னது நிலைகளும் பெயரும், எவ்விடங்களிலும் வறு
மை மிகுதியாகும். சந்திரசூரியர்களும் நிலைகெடுவார்
கள், பூவுலகமெல்லாம் பொலிவழிந்து நிற்கும், உல
கில் வாழத்தக்கவர் யார், எ-று. 125

தலைவி கூற்று.

என்னனைக் கன்று முத்தனைக் குனிக்கு
மிறையனை யனைக்குமே யன்று
மன்னனைக் கன்று பின்னனைக் குதவா
ரவன்புவில் வருந்திவா டுவனோ
முன்னனைக் கொன்று பின்னனைப் பரந்த
முதுபகை வுன்பிதா வுறாமல்
கர்ணனைக் கொன்று விசயனைப் புகழ்ந்த
கவுத்துவ ராமருஷ் ணயனே.

[இ-ள்] என் தாய்க்கு மாத்திரமல்ல முத்துக்குத் தாயான கரும்பை வில்லாக வளைக்கும் மன்மதனுக்குத் தாயாகிய இலக்குமிக்குப் பிறப்பிடமான சமுத்திரத்தாலும் பெற்ற தாய்க்கே யல்லாமல் பின் வளர்ந்த தாய்க்கு முதவாத வலிய குயிற்பட்சியாலும் துன்பமுற்று வாட்டமடைவனோ இராமாவதாரத்தில் மூத்த வாலியைக் கொன்று இளையவனாகிய சுக்ரீவனை ரட்சித்த பழமையான பகையை அவன் தந்தையான இந்திரனடையாமல் கிருஷ்ணாவதாரத்தில் கர்ணனைக்கொன்று அர்ச்சுனனை இரக்ஷித்த கௌஸ்துபாபரணமணிந்த இராமகிருஷ்ணனே, எ-று. 126

கவுத்துவம் என்பது கபடமென்னும் பொருளுக்கு மிடமாயிற்று.

நேரிசை வெண்பா.

பண்புளருக் கோர்பறவை பாவத்திற் கோரிரக்கம், நண்பிலரைக் கண்டக்கா ணுற்காலி-திண்புவியை, ஆள்வார் மதுரை யழகிய சொக்கர்க்கரவம், நீள்வானகனதன் னிலம்.

[இ-ள்] நற்குணமுள்ளவருக்கு ஈ (கொடுபாவச் செய்கைக்கு அஞ்சு (பயப்படு) நண்பற்றவரைக்கா

ணில் விலகு (நீஙகு) வலிமிகுந்த உலகத்தை யாளும் படியான மதுரை சோமசுந்தரேசருக்குப் பணிவிடை செய். அரவம் நீள்வாகன நன்னிலம் என்றதில் ,அரவம்-பணி, வாகனம்-விடை, நிலம்-செய், எனவே பணிவிடைசெய் என்பது பொருள், எ-று. 127

### மும்மூர்த்திகளின் உணவாதிகளைப் பற்றிக் கூறியது.

சிறுவனைபயறு செந்நெறகடுகு
மறிதிகிரிவண்டு மணிநூற்—பொறியரவம்
வெற்றேறுபுள்ளன்னம் வேதனரன்மாலுக்குக்
கற்குழம்பூவே கறி.

[இ-ள்] பிரமனுக்கு பயறு கறியும், செந்நெல் உணவும், தண்டம் ஆயுதமும், உபவீதம் பூஷணமும், அன்னம் வாகனமும், தாமரை வசிக்குமிடமாம்; விஷ்ணுவுக்கு வெண்ணெய் கறியும், பூமி உணவும், சக்கரம் ஆயுதமும், கவுத்துவம் ஆபரணமும், கருடன் வாகனமும், கடல் வசிக்குமிடமாம், சிவபெருமானுக்கு பிள்ளை கறியும், விஷம் உணவும், மான் ஆயுதமும், சர்ப்பம் பூஷணமும், ரிஷபம் வாகனமும், திருக் கைலாயம் வசிக்குமிடமாம், எ-று. 128

சிரம்பார்த்தா னீசனயன் றேவிதனைப் பார்த்தான்; கரம்பார்த்தான் செங்கமலக் கண்ணன்-உரஞ்சேர், மலைவெளுத்த திண்புயத்து வண்ணான் ஸ்ரீராமன்; கலைவெளுத்த நேர்த்திதனைக் கண்டு.

[இ-ள்] சிவன் தலையைப் பார்த்தான், பிர்மா தன் மனைவியைப் பார்த்தான், சிவந்த தாமரைபோலுங் கண்ணன் தன்கையைப் பார்த்தான்; பலமுடைய மலையையும் வெளுக்கச் செய்யும்படியாடின புயமுடைய ஸ்ரீராமனென்னும் பெயரையுடைய வண்ணான் வஸ் 129

திரம் வெளுத்துக் கொடுத்த நேர்த்தியைப் பார்த்தான், எ-று.

கரியென்று பொன்மிகும் பையேறக் கற்றவர் சூழ்ந்துதொழ, எரியென்னும் செல்வன் றுலாத்தினி லேறி விருண்டமஞ்சு, சொரிகின்ற நாகமின் சேற்றி னிலேறித் தொடர்ந்துவர, நரியென்று சொந்தக் கன லேறி வந்தது நங்களத்தே.

[இ-ள்] யானைஉருவமைந்த கணபதி பெருச்சாளி யிலேறியும், கல்விமான்கள் சூழ்ந்து துதிக்க முருகக் கடவுள் மயிலிலேறியும், சூலங்கொண்ட மேகங்கள் படர்ந்து மழை பொழிகின்ற, பருவத்திலுற்பவித்த உமாதேவி அன்னப்பட்சியிலேறியும், சம்பு நந்தியி லேறியும் நம்மிடத்தே வந்தார்கள், எ-று. 130

பொன் மிகும்பை-பெருச்சாளி, எரியென்னும் செல்வன்-முருகன், துலா-ஸ்தானக் கூட்டம், மாயூரம்-மயில், நாகமின்-வரையுமை, சோறு-அன்னம், சொந் தக் கனல்-நந்தீ, (நம்தீ.)

ஒருபாதி மால்கொள மற்றொருபாதி யுமையவள் கொண் டிருபாதியாலு மிறந்தான் புராரியிருநிதியோ, பெருவா ரிதியிற் பிறைவானிற் சர்ப்பம் பிலத்திற்கற்ப, தருவான போஜ கொடையுன்கை யோடென் கையிலீந் தனனே.

[இ-ள்] ஒரு பாகத்தை விஷ்ணுகொள்ளவும் மற்றொரு பாகத்தை உமையவள் கொள்ளவும் ஆக இரண்டு பாகத்திலும் திரிபுர சம்மார கர்த்தனை சிவன் இறந்துபோயினன். சங்கநிதி வானத்திலும் ஆதிசேடன் பாதாளத்திலும் புகுந்து போஜமகாராஜ னே கற்பக விருக்ஷம் போலும் கொடைத்தன்மை உன்கையிலும் உன் கையிலேந்திய ஓட்டை என் கை யிலும் கொடுத்தனன். 131

கம்பமத கடகளிற்ருன் றில்லைவாழும் கணபதி தன் பெருவயிற்றைக் கண்டுவாடி, யும்பரெல்லாம் விழித்திருந்தா ரயில்வேற்செங்கை யுடையவறு முக வனுங்கண் ணீராருனன். பம்புசுடர் கண்ணனுமோ நஞ்சுண்டான்மால் பயமடைந்தா னுமையுமுடல் பாதியானாள் அம்புவியைப் படைத்திடுவ தவமேயென் றயனுமன்ன மிறங்காம லலைகின்ருனே.

[இ-ள்] மும்மதங்களோடு கூடிய யானைமுகமுடையவராய்த் திருத்தில்லையிலமரும் கணபதியினுடைய பெருவயிற்றைப் பார்த்து பயந்து தேவர்கள் இமையாதிருந்தார்கள். வேலாயுதத்தைக் கையில் வைத்திரானின்ற ஆறுமுகன் கண்ணீராருனன் பொருந்திய அக்கினிக்கண்ணையுடைய சிவன் விடத்தையுண்டான். மகாவிஷ்ணு பயமடைந்தான். உமாதேவியும் தேகம் பாதியானாள். பிர்மா உலகத்தை படைத்திடுதல் வீணென்று அன்னமிறங்காமல் அலைந்தான், எ-று. 132

இமையாதிருத்தல்-கண்ணசையாதிருத்தல், ஈராறு-பனிரெண்டு, பயம்-ஜலம், அன்னம்-ஓதிமம். இவைகள் இயற்கையாயுள்ளதை வியந்து புதுமையாகக் கூறியிருக்கின்ருர்.

காமமே குலத்தினையும் நலத்தினையும் கெடுக்க வந்த களங்கம், காமமே தரித்திரங் களனைத்தினையும் புகட்டி வைக்குங் கடாரங், காமமே பரகதிக்குச் செல்லாமல் வழியடைக்குங் கபாடங், காமமே யனைவரையும் பகையாக்கி கழுத்தரியுங் கத்திதானே.

[இ-ள்] பெண்கள் மயக்கமாகிய காமமே ஜாதிநெறியையும் நன்மையையும் கெடுத்துவிடும்படியான குற்றம், வறுமைகளை நிறைத்துவைத்திருக்கும் பொக்கிஷம், முத்திமார்க்கத்திற்கெல்லாம் வழியடைத்திருக் 133

குங்கதவு, அனைவரையும் பகையுண்டாக்கி கழுத்த றுக்கத்தக்க வாளாயுதமாம். எ-று.

### கலிவிருத்தம்.

தடாரி தண்ணுமை பேரிகை சல்லரிடக்கை,
கடாகமெங்கணு மதிர்ந்திட ஒலித்திடக்காணல்,
விடாத நாணகன் றன்னிய புருடனை விழித்தே,
அடாது செய்தமங் கையர்வகை யொலித்தல்போ லா
மால்.

[இ-ள்] பம்பை, மத்தளம், பேரிகை, சல்லரி, இடக்கை நகார் முதலிய வாத்தியங்களதிர்ந்திட சப்தித்தலைப் பார்த்தலானது விடக்கூடாத வெட்கம் நீங்கி, அன்னியநாயகனை இச்சித்து பொருந்தாத காரியத்தைச் செய்தபெண்களினது இயற்கைக்குணங்கள் சப்தித்தலை கேட்டது போலாம், எ-று. 6 134

### வேறு

தண்டுலமினகின் றாள்புளியுப்பு
தாளிதம்பாத்திர மிதேஷ்டம்
தாம்புநீர்தோற்ற மூன்றுகோலாடை
சக்கிமுக்கியுங் கைரசந்தல்
கண்டகங்காண்பான் பூசைமுஸ்தீபு
கழற்குடையேல் சிற்றுண்டி
கம்பிளியூசி நூலடைக்காய்ப்பை
கரண்டகங் கண்டமேற்றங்கு
துண்டமுறியகாய் கரண்டிநல்லெண்ணை
துட்டுடன் பூட்டுமேகத்தி
சொல்லியதெல்லாங் குறைவறத்திருத்தித்
தொகுத்துபலவிலு மமைத்துப்

பெண்டுகடுணையோ டெய்துவாகனனாய்
பெருநிலை நீர்நிழல்விறகு
பிரஜையுந்தங்கு மிடஞ்சமைத்துண்டு
புறப்படல் யாத்திரைக்கழகே.

[இ-ள்] அரிசி, மிளகுப்பொடி, புளி, உப்பு, மிகுதியான தாளிமை பதார்த்தக் கறிவடகம், கயிறு, தண்ணீர் அளவறிய ஊன்றுகோல், வஸ்திரங்கள், சக்கிமுக்கி அல்லது நெருப்புண்டாக்கும் கருவி, கை ராந்தல் அரிவாள், கண்ணாடி, பூசைக்குரிய சாமான்கள், பாதரட்சை, குடை, வேலையாள், சிற்றுணவு அல்லது பலகாராதிகள், கம்பளி, ஊசி, நூல், வெற்றிலையாதி வைக்கும் பை, கரண்டகம், எழுத்தாணி, ஊறுகாய்த்துண்டு, கரண்டி, நல்லெண்ணெய், தட்டு, பூட்டு, கத்தி இவை முதலாகச் சொல்லப்பட்டவைகளெல்லாம் குறைவில்லாமல் திருத்தத்தோடு பலவகைகளிலுஞ் சேகரித்து ஸ்திரீகள் துணையோடு சரியான வாகனத்தோடு பெருத்த நிலையான நிலம், நல்லநிழல் விறகு, ஜனங்கள் தங்குமிடங்கண்டு சமைத்துண்டு பிரயாணஞ் செய்தல் யாத்திரைக்காரருக் கழகாம், எ-று. 135

விவேகசிந்தாமணி மூலமும் உரையும்
முற்றுப் பெற்றன.

ஸ்ரீமத்

# கம்பராமாயண வசனம்

(சப்தகாண்டங்கள் அடங்கியது.)

[☞ இதேமாதிரி பெரிய எழுத்தில் படங்களுடன் அச்சிட்டுள்ளது.]

| | |
|---|---|
| 1064பக்கங்கள்:உயர்ந்த காலிகோ பைண்டு செய்தவை விலை | ரூ 5. |
| ஷை திக்கு கடிதம் 2-வால்யம் | ரூபா 8. |
| ஷை உயர்ந்த கிளேஸ் கடிதம் | ரூபா 12 |

ஸ்ரீராமபிரான் சரிதையை விரித்துக்கூறும் இந்த இராமாயண மானது மிக்க புண்ணிய கதை யென்பது உலகறிந்த விஷயம். இதனைப் பாராயணஞ்செய்வதாலுண்டாகும் பயன்கள் அளவிடற் கரியனவாம். இதனைப் பக்தி சிரத்தையுடன் படிப்பவர்க்கு உலகத் தில் விரும்பக்கூடிய பொருள்களெல்லாம் கைகூடும்; உயர்ந்த அறி வுண்டாகும்; கீர்த்தி அதிகரிக்கும்; மோக்ஷத்தை அடையும் மார்க் கம் ஏற்படும்; இலக்குமி கடாக்ஷமுண்டாகும்.

இன்னும் இந்த இராமாயணத்தைப் பக்தியுடன் படித்துமுடி க்குமிடங்களில் கலியாணம் முதலிய மங்கள காரியங்கள் நிறைவே றும்; புத்திரபாக்கியமுண்டாகும்; பசு, பால், தானியம் முதலியன விருத்தியாகும்; பில்லி, சூனியம், தீராத நோய், பூதபைசாச உபத் திரவங்கள் முதலியன்வ நீங்கும்; பகை நீங்கும்; விஷ ஜெந்துக்கள் அணுகமாட்டா; பஞ்சம் நீங்கும்; நல்லமழை பெய்யும்; துக்கமான சம்பவங்கள் நீங்கி மிக்க ஆனந்தமுண்டாகும். இவையெல்லாம் உண்டாவது நிச்சயம். இராமாயணம் படித்த பற்பல இடங்களில் இப்பயன்கள் உண்டாகி யிருக்கின்றன. இவற்றை ஒவ்வொருவ ரும் அனுபவத்திலும் உணர்ந்து கொள்ளலாம்.

☞ சொற்பக் காப்பிகளே அச்சிடப்பட்டிருக்கின்றன. ஆத லின் புஸ்தகம் வேண்டியவர்கள் முன்னரே எழுதிப் பெற்றுக் கொள்க.

சரஸ்வதி புத்தகசாலை,
63, ஜிந்தும்பிட்டித்தெரு,
கொழும்பு

சங்கீதபிரியர்களுக்கு ஓர் நல்லவிருந்து

# கிராமபோன் சங்கீத கீர்த்தனாம்ருதம்.

மூன்று பாகம் சேர்ந்த ஒரே கட்டடம் ரூ 3—0—0

4 ம், 5 ம், 6 ம் பாகம் கூடியது

சீக்கிரம் வெளிவரும்.

இப்போது கிராமபோன் என்னும் விஞ்ஞான கருவியில் பாடிவரும் திருச்செந்தூர் ஷண்முகவடிவு எஸ். வி. சுப்பையா பாகவதர், டி. எம். காதர்பாஷா, எஸ். ஆர். கமலம், பெங்களூர் தாய், மிஸ் கே. ரங்கநாயகி, சேலம் அப்பாகண்ணு, வி. சுப்பிரமணிய பாகவதர், ஏ. எல். ராசப்பா, கனகரத்தினமும், மாணிக்கமும், சேலம் கோதாவரி, லோகாம்பாள், வீணை தனம், குமாரத்திகள், பிரம்மஸ்ரீ என். எஸ், துரைசாமி அய்யர், மற்றுமுள்ள ஸ்திரீ ரத்னங்களும் மாஸ்டர் எஸ். ஜி. கிட்டப்பா கே. பி. சுந்தராம்பாள் முதலிய நடிக ரத்தினங்களுடைய (670) பக்கங்களுக்கு மேற்பட்ட கீர்த்தனை, விருத்தம், கட்டளை கலித்துறை முதலிய அரும் பெரும் பாடல்களை ஒருங்கே யமைத்து ராகதாளங்களுடன் அச்சிட்டு கண்ணைக் கவரத்தக்க பயிண்டு செய்து எங்களிடம் சொற்ப விலைக்கு தயாராயிருக்கிறது. தனிபாகம் விலை ரூபா 1—0—0

சரஸ்வதி புத்தகசாலை,
63, ஜிந்தும்பிட்டித் தெரு, கொழும்பு.

ஸ்டான்லி பிரஸ், நிர். 3, பார்பர் ஸ்டிரீட் கொழும்பு.